**Statement about ownership of AMBULIMAMA (Tamil)**
**Rule 8 (Form VI), Newspapers (Central) Rules, 1956**

| | | | |
|---|---|---|---|
| 1. | *Place of Publication* | ... | 'CHANDAMAMA BUILDINGS'<br>2 & 3, Arcot Road<br>Vadapalani, Madras-600 026 |
| 2. | *Periodicity of Publication* | ... | MONTHLY<br>1st of each calendar month |
| 3. | *Printer's Name* | ... | B. V. REDDI |
| | *Nationality* | ... | INDIAN |
| | *Address* | ... | Prasad Process Pvt Limited<br>2 & 3, Arcot Road, Vadapalani<br>Madras-600 026 |
| 4. | *Publisher's Name* | ... | B. VISWANATHA REDDI |
| | *Nationality* | ... | INDIAN |
| | *Address* | ... | Chandamama Publications<br>2 & 3, Arcot Road, Vadapalani<br>Madras-600 026 |
| 5. | *Editor's Name* | ... | NAGI REDDI |
| | *Nationality* | ... | INDIAN |
| | *Address* | ... | 'Chandamama Buildings'<br>2 & 3, Arcot Road, Vadapalani<br>Madras-600 026 |
| 6. | *Name & Address of individuals who own the paper* | ... | CHANDAMAMA CHILDREN'S TRUST FUND<br>Beneficieries: |

1. B. V. HARISH
2. B. V. NARESH
3. B. V. L. ARATI
4. B. L. NIRUPAMA
5. B. V. SANJAY
6. B. V. SHARATH
7. B. L. SUNANDA
8. B. N. RAJESH
9. B. ARCHANA
10. B. N. V. VISHNU PRASAD
11. B. L. ARADHANA
12. B. NAGI REDDI

All Minors—by Trustee:
M. UTTAMA REDDI, 9/3, V.O.C. Street, Madras-600 024

I, B. Viswanatha Reddi, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

1st March 1979

**B. VISWANATHA REDDI**
*Signature of the Publisher*

# அம்புலிமாமா

ஸ்தாபகர்: 'சக்கரபாணி'
நிர்வாக ஆசிரியர்: நாகிரெட்டி

ஒரு மகன் தன்தந்தைக்குச் செய்யும் பதில் உதவி என்ன? தான் பெற்ற மகன் பிறரால் புகழப்படுகிறான் எனத் தந்தை எண்ணி மகிழ நடந்து கொள்வதே ஆகும். இதனையே வள்ளுவரும்,

மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி இவன் தந்தை
என்நோற்றான் கொல் எனுஞ் சொல்.

என்று கூறினார். எனவே தந்தை மனம் மகிழ மகன் புகழ் பெற செயல்களைப் புரிய வேண்டும்.

நற்குணமும், பொறுமையும், இனிய குணமும், நற்குடிப்பிறப்பும் பணம் இல்லாதவனுக்குக் கிடைப்பது அரிது என்பதையே இந்த வடமொழி சுலோகம் உணர்த்தி இருக்கிறது.

சீலம் சௌசம் சாந்தி தாட்சண்யம்
மதுரதா குலே ஜன்ம
ந விராஜந்தி ஹி சர்வே
வித்த விஹீனஸ்ய புருஷஸ்ய

எனவே பணமே பத்தும் செய்யும் என்ற முதுமொழியை இது நமக்கு நினைவுபடுத்துகிறது.

மதிமுகம்: 64 மார்ச் 1979 புன்னகை: 3

தனிப் பிரதி: ரூ. 1–25 வருட சந்தா: ரூ. 15–00






**கே. பத்மநாபபட், கார்கலா (கர்நாடகம்)**

கேள்வி : பூகம்பங்கள் ஒரே இடத்தில் ஏற்படக் காரணம் என்ன?

பதில்: பூமியில் பல இடுக்குகளும், பள்ளங்களும் அதன் மண் பாறை அடுக்குகளில் உள்ளன. இவை ஒரே மாதிரி கனம் உள்ளவை அல்ல. ஒரே அளவுள்ள பல கற்கள் வெவ்வேறு நிறை உள்ளதாக இருக்கும். இவ்வாறு இலேசாயும் கனமாயும் உள்ள மண் பகுதியும், கற்கள் அடுக்கு வரிசைகளும் ஓரிடத்தில் இருந்தால் பூமியின் அசைவின் போது கனமாக உள்ள கல் வரிசை லேசாக உள்ள கல்வரிசையை அழுத்தி நிலப்பரப்பில் பள்ளங்களையும், சரிவுகளை யும் ஏற்படுத்துகிறது. இதனுல் அப்பகுதியில் பூமியின் மேற்பரப்பிலுள்ள கட்டடங்களும் இடிந்து சரிந்து விடுகின்றன.

**ஜி. என். ரமணுரெட்டி, பல்லவகுப்பம் (தமிழ்நாடு)**

கேள்வி : பஸ் போகும் போது அதன் விளக்கின் ஒளியைச் சுற்றி பூச்சிகள் வட்டமிடுவதைப் பார்த்திருக்கிருேம். இவை பஸ் போகும் போதே கூட வருகின்றனவா?

பதில் : பஸ் வேகமாகச் செல்லும் போது காற்று வேகமாக வீசுவதால் இப்பூச்சிகளும் அடித்துச் செல்லப்படுகின்றன. எனவே இவை தாமே முன் செல்வதில்லை. ஒருவன் ஓரிடத்தில் உட்கார்ந்திருந்தால் அவன் பல மைல் வேகத்தில் நகர்ந்து செல்ல முடியாது. ஆனுல் நகரும் வண்டியிலோ விமானத் திலோ இருந்தாலே வேகமாகப் போகலாம். எனவே பூச்சிகளும் பறப்பது பஸ் விளக்கொளியில் நமக்குத் தெரிகிறது.

**எல்லேஸ்வர வெங்கட கிருஷ்ணு, மங்களகிரி (ஆந்திரம்)**

கேள்வி : மனிதர்கள் புலித்தோல், மான் தோல் ஆகியவற்றின் மீது ஏன் உட்கார்கிருர்கள்?

பதில் : மனிதர்கள் காடுகளில் வசித்த போது மிருகங்களைக் கொன்று தின்று வந்தார்கள். அப்போது நூலோ, துணியோ, பாயோ தயாரிக்க அவர் களுக்கு தெரிந்திருக்கவில்லை. எனவே மிருகங்களின் தோல்களை விரிப்பாக உப யோகித்து வந்தார்கள். இதுவே இத்தகைய தோல்களின் மீது உட்காரக் காரணம்.



# கை நழுவுதல்

நந்தன் ஒரு சக்கரவர்த்தி. அவனுடைய மந்திரிகளில் வரருசி என்பவனும் ஒருவன். இருவரும் தம் மனைவிகளைப் பெரிதும் விரும்பி அவர்கள் சொன்னபடியெல்லாம் நடந்து வந்தார்கள்.

ஒருநாள் வரருசிக்கும் அவர் மனைவிக்கும் இடையே ஏதோ ஒரு காரணத்துக்காக மனத்தாங்கல் ஏற்பட்டது. வரருசி என்ன சொன்ன போதிலும் அவருடைய மனைவி சமாதானம் அடையவில்லை. முடிவில் வரருசி அழாத குறையாக ''நீ ஏன் இப்படிக் கோபித்துக் கொள்கிறாய்? இப்போது நான் என்ன செய்து விட்டேன்? அப்படி ஒரு வேளை நானே தவறு செய்திருந்தாலும் மறந்து விடு. இனி மேல் இப்படிச் செய்ய மாட்டேன். நீ என்ன சொன்னாலும் செய்யத் தயாராக இருக்கிறேன்'' என்றார். அவரது மனைவியோ ''நீங்கள் உங்கள் தலையை மொட்டை அடித்துக் கொண்டு என் காலில் விழுந்து மன்னிப்பு கேட்க வேண்டும்'' என்றாள். அவரும் அது போலவே செய்தார்.

அதே நாளன்று நந்தனுக்கும் அவனது மனைவிக்கும் இடையே மனஸ்தாபம் ஏற்பட்டது. நந்தன் என்ன சொல்லியும் ராணி எதையும் ஏற்கவில்லை. அப்போது நந்தன் ''நீ என்ன செய்யச் சொன்னாலும் செய்யத்தயார். நீ மட்டும் கோபத்தை விட்டுவிடு'' என்று கெஞ்சினான்.

அவளும் "நீங்கள் உங்கள் வாயில் குதிரையின் கடிவாளங்களைக் கடித்து நிற்க நான் உங்கள் முதுகின் மீது ஏறி சவாரி செய்வது போல செய்வேன். சம்மதமா?''



என்று கேட்டாள். நந்தனும் அதற்குச் சம்மதித்து அவ்வாறே செய்தான்.

மறுநாள் தர்பாருக்கு வரருசி மொட்டைத் தலையுடன் வந்தார். அதன் காரணத்தை முன்பே ஒற்றர்கள் வாயிலாக அறிந்துக் கொண்டிருந்த நந்தன் ''என்ன வரருசி! ஏன் உம் தலையை மொட்டை அடித்துக் கொண்டீர்? ஏதாவது பந்தயத்தில் தோற்றீரா?'' என்று கிண்டலாகக் கேட்டான்.

வரருசிக்கு நந்தன் குதிரை போல குனிந்து தன் மனைவியைச் சவாரி அனுமதித்தது சில வேலைக் காரர்கள் சொல்லித் தெரிந்து இருந்தது. எனவே அவர் ''சில சமயங்களில் நாம் கழுதை, குதிரை போலக்கூட நடிக்க வேண்டி வருகிறது. அதைவிட தலை மொட்டை யாவது மோசமில்லை'' என்றார். நந்தன் வாயடைத்துப் போனான்.

இந்தக் கதையைக் கூறி மூடனே அவர்கள் இருவரது செய்கைகளால் யாருக்கும் எந்தவித தீங்கும் ஏற்படவில்லை. அவர்களது மனைவிகளின் மனம் சந்தோஷப் பட்டது. ஆனால் நீயோ உன் மனைவியின் பேச்சைச் கேட்டு உன் நண்பனையே கொல்ல வந்து விட்டாய்? ஆனால் வாய் தவறி உண்மையைக் கூறி விட்டாய். இம் மாதிரி வாய் தவறிக் கத்தின கழுதையின் கதை தெரியுமா? சொல்கிறேன். கேள்'' என்று கதை சொல்லலாயிற்று.

ஒரு கிராமத்தில் ஒரு வண்ணான் இருந்தான். அவனிடம் ஒரு கழுதை இருந்தது. அதற்கு அவனால் சரியாகத் தீனி கூடப்போட முடியவில்லை. அதுவும் மெலிந்து இருந்தது.

ஒருநாள் வண்ணான் காட்டில் செத்துக் கிடந்த புலி ஒன்றைப் பார்த்தான். அவனுக்கு ஒரு யோசனை தோன்றியது. ''இந்தப் புலியின் தோலை எடுத்து என் கழுதை மீது போர்த்தி வயல்களில் மேய விடுகிறேன். கிராமத்தவர்

கள் எல்லோரும் இதனை உண்மையான புலி என்று எண்ணி பயந்து ஓடி விடுவார்கள். இதனை ஒன்றும் செய்யவும் மாட்டார்கள். இதுவும் வயல்களில் நன்கு திரியும் அப்போது இதற்கு சாப்பிட புல்லும் வைக்கோலும் கிடைக்கும். எல்லோரும் பயந்தும் ஓடி விடுவார்கள்.'' இவ்வாறு அவன் மனதில் எண்ணி புலியை எடுத்துப் போய் அதன் தோலை உரித்து எடுத்துக் கழுதை மீது போர்த்தி விட்டான்.

கழுதையும் பல வயல்களில் திரிந்து புல்லையும் வைக்கோலையும் நன்ருக சாப்பிடலாயிற்று. எல்லோருமே புலிதான் வந்திருக்கிறது என எண்ணி பயந்து ஓடினூர்கள்.

ஒருநாள் அந்தப் புலித்தோல் போர்த்த கழுதை ஒரு பெண் கழுதையைக் கண்டதும் மகிழ்ந்து போய் பலமாகக் கத்தியது. அப்போது எல்லோருக்கும் அது புலி யல்ல, கழுதை என்பது தெரிந்தது உடனே ஓடிவந்து அதனை எல்லோருமாக சேர்ந்து அடித்துக்கொன்று விட்டார்கள்.

குரங்கு இந்தக் கதையைக் கூறி முடித்தபோது ஒரு நீர் வாழ் பிராணி வந்து முதலையிடம் ''உன் மனைவி உன்னை எதிர்பார்த்து சாப்பாடுகூட இராமல் இருந்தாள். நீ வெகுநேரமாகியும் வராததால்



அவள் மனம் உடைந்து தற்கொலை செய்து கொண்டு இறந்து விட்டாள்'' என்றது.

இதைக் கேட்ட முதலை ''ஐயோ என் மனைவி போய்விட்டாளா? அவள் இல்லாமல் இனி நான் எப்படி உயிர் வாழ்வேன்? மனைவி இல்லாத வீடு பாழ். நானும் என் உயிரை விடுகிறேன்'' என்றது.

அதற்குக் குரங்கு ''நீ உன் மனைவி ஆட்டி வைக்கிறபடியெல்லாம் ஆடுகிருய் என்பது எனக்கு முன்பே தெரிந்து விட்டது. இப்போது அவளுக்காகக் கண்ணீர் விடுகிருய். மூடனே, அவள் இறந்ததற்காக நீ சந்தோஷப்பட வேண்டும், அவளால் உன் வாழ்க்

கையில் சுகமே இல்லை. இப்படிப் பட்டவளை வழிக்கொண்டுவர முடியாமல் நீ உயிர்விடுவதாகக் கூறுகிறாயே. இது சரியல்ல. குடியானவனைப் போல அப்படியெல்லாம் செய்யாதே" என்றது.

''குடியானவனின் கதையா? அது என்ன கதை?" என்று குரங்கு கேட்க முதலையும் கதை கூறலாயிற்று.

ஒரு குடியானவன் தன் அழகிய மனைவியுடன் வாழ்ந்து வந்தான். அவர்களுக்கு குழந்தை குட்டி என யாருமே இல்லை. குடியானவனே வயதானவன். அவன் மனைவியோ இளம் வயதானவள். எனவே அவள் மனம் இளம் வாலிபனைப் பற்றியே எண்ணயிலாயிற்று.

இதைத் தெரிந்த ஒரு போக்கிரி அவளை ஒரு நாள் சந்தித்து ''அழகான பெண்ணே. உன்னைப் பார்த்தது முதல் என் மனம் உன்னிடம் லயித்து விட்டது. என் மனைவி போன மாதம் தான் இறந்து போனாள். நான் தனியாகத்தான் இருக்கிறேன். நீ என்னோடு வந்து விட்டால் சுகமாக வாழலாம்'' என்றான்.

அவளும் ''ஓ! எனக்கு ஆட்சேபணை இல்லை. என் கணவன் நிறையப் பணம் சேர்த்து வைத்திருக்கிறான். அதையும் இரவோடு இரவாகக் கொண்டு வருகிறேன். நாம் எங்கேயாவது ஓடிப்போய் அதை வைத்துக்கொண்டு சுகமாக வாழலாம்'' என்றாள்.

அவனும் ''சரி இன்று இரவே அப்படியே செய்'' எனக்கூறி அவள் வர வேண்டிய இடத்தையும் குறிப்பிட்டான். அவளும் அன்றிரவு தன் கணவன் தூங்கிய பின் பணத்தையெல்லாம் எடுத்துக் கொண்டு அவன் குறிப்பிட்ட இடத்திற்கு வந்தாள். அந்தப் போக்கிரியும் அவளுக்காகக் காத்திருந்தான். இருவரும் அப்போதே அந்த ஊரை விட்டு ஓடிப் போனார்கள்.





# கானகக் கரடிராயன்

## 8

[ உதயகிரி மன்னனை தலையாரியான கரடி மனிதன் துரத்தினான். அவன் ஒரு குகையில போய் உலக்கைராயன் என்ற ராட்சஸனைக் கண்டு தன் நினைவு இழந்து விழுந்தான், அவனது மயக்கத்தைப் போக்க அவனது மெய்க்காவலாளி தண்ணீர் கொண்டு வரப் போனான். நீரோடை அருகே அவன் துதிக்கை அறுந்த யானையைக் கண்டு அலறினான். அது அவனைத் துரத்திக் கொண்டு வரலாயிற்று. அப்போது— ]

உலக்கைராயன் ஓடி வந்துகொண்டிருக்கும் யானையைப் பார்த்து தலையாரியான கரடிமனிதனிடம் ''இதுவா உன் யானை? பார்த்தால் காட்டு யானை போல் தெரிகிறதே'' என்றான்.

அவனும் ''ஆமாம். வழியில் பார்த்து என் கோடாலியால் அதன் துதிக்கையை அறுத்து அதன் மீது ஏறி உட்கார்ந்து இங்கே வந்தேன்'' என்றான். இதற்குள் யானையும் அவர்களை அணுகி விட்டது.

அதைக் கண்டு நாகப்பனும் அவனது ஆட்களும் குகையை நோக்கி ஓடினார்கள். இதுதான் சமயம் என்று அப்போதே தன் நினைவைப் பெற்ற உதயகிரி மன்னனும் எழுந்து காட்டினுள் ஓடினான். மெய்க்காவலாளியோ உலக்கை



ராயனின் பின்னுல் போய் நின்று கொண்டான்.

உலக்கைராயன் தன் கல் கதையைச் சுழற்றியவாறே யானையைத் தாக்கச் சென்றுன். கரடிமனிதனும் தன் கோடாலியைச் சுழற்றியவாறே யானையிடம் ''ஏய்! நான் யார் என்று தெரியவில்லையா? பார் நன்றுக'' என்று உரத்த குரலில் கூவினுன்.

ஆனுல் யானையோ கரடிமனிதனைத் தன் அறுந்த துதிக்கையால் பற்றி உயரத் தூக்கி விட்டது. அதைக் கண்ட உலக்கைராயன் தன் கதையால் அதன் வயற்றில் ஓங்கி ஒரு அடி கொடுத்தான். அதன் காதைப் பிடித்தும் நிமிண்டினுன். இதனுல் யானை தன் பிடியைத் தளர்த்தியது. கரடிமனிதன் தடாலெனக் கீழே விழுந்தான். யானையும் உருண்டு விழுந்தது.

உலக்கைராயன் ஓடிப் போய் அதன் முன்னங்கால்கள் இரண்டையும் பிடித்துக் கொண்டு ''ஏய் வெண்ணெவெட்டி மெய்க்காவலாளி! ஓடிப் போய் காட்டு கொடிகளைப் பிடுங்கி எடுத்து வா. இதன் கால்களைக் கட்டிப் போடலாம்'' என்றுன்.

மெய்க்காவலாளியும் உடனே ஓடினுன். கீழே விழுந்த கரடிமனிதன் எழுந்து ''உலக்கைராயா! பேஷ். உனக்கு நிறைய பலம் இருக்கிறதே'' என்றுன். உலக்கைராயனும் ''முதலில் இந்த யானையைக் கட்டிப் போட்டு விட வேண்டும். பிடி இந்தக் கால்களை'' என்றுன்.

அவனே ''இது என்னைச் சுமந்து வந்தது. இதன் காலையா நான் பிடிப்பது? ஊஹூம். வேண்டுமானுல் என் கோடாலியால் இதன் தலையையே வெட்டிப் போட்டு விடுகிறேன்'' என்றுன்.

உலக்கைராயனே ''வேண்டாம். நீ வந்த வேலை என்ன? அதை மறந்து விட்டாயா! அதைச் செய்து முடித்த பின் உன் குருவைக் காண எப்படிப் போகப் போகி

ளுய்?'' என்று சொன்னான். அது கேட்டு கரடிமனிதன் ''ஆமாம். அந்த உதயகிரி மன்னன் எங்கே நழுவி விட்டான்?'' என்று சுற்றி லும் பார்க்கலானான்.

கீழே விழுந்த யானையோ உலக்கைராயன் பிடியிலிருந்து திமிறித் தப்பிக்க முயன்றது. அது பயங்கரமாகப் பிளிறிட்டு அப்படி யும் இப்படியும் உருண்டது. உலக்கைராயனே அதன் காதைப் பிடித்து முறுக்கியவாறே ''ஏய் வெண்ணெய்வெட்டி! எங்கே போனாய்? சட்டெனக் கொடிகளைப் பிடுங்கிக் கொண்டு வா. தாமதிக் காதே'' என்று கத்தினான்.

இதற்குள் நாகப்பனும் அவனது ஆட்களும் சில கொடிகளைப் பிடுங் கிக் கொண்டு வந்து உலக்கைராய னிடம் கொடுத்தார்கள். அதைக் கொண்டு அவன் யானையின் கால் களை இறுகக் கட்டியும் தன் ஆட் களை அவ்வாறு கட்டிப் போடச் சொன்னான்.

அப்போது கரடிமனிதன் தன் கோடாலியை எடுத்து ஆட்டிய வாறே நாகப்பனிடம் ''அடே வழிப்பறிவீரர்களா! எங்கே அந்தப் பயங்கொள்ளி ராஜா? எங்கே ஒளித்து விட்டு வந்தீர்கள்? சொல்லப் போகிறீர்களா அல்லது உங்கள் தலைகளையெல்லாம் வெட்டி எறியட்டுமா?'' என்று கர்ஜித்தான்.

அது கேட்டு நாகப்பன் நடுநடுங் கியவாறே ''அந்த மோசக்கார





மன்னன் இந்தக் காட்டில் எங்கேயோதான் ஒளிந்து கொண்டிருக்கவேண்டும். நாங்களே தேடிப் பிடித்து உங்கள் முன் கொண்டு வந்து நிறுத்துகிறோம்'' என்ருன்.

இதே சமயம் வெண்ணெய் வெட்டியும் சில காட்டு கொடிகளைத் தன் தோளின் மீது போட்டுச் சுமந்தவாறே அங்கே வந்து சேர்ந்தான். உலக்கைராயன் உடனேயே "உம். அதனையும் அவர்களிடம் கொடு. யானையின் கால்களை இன்னும் பலமாகக் கட்டிப் போடட்டும்'' என்ருன்.

அப்போது கரடி மனிதன் 'அடே வெண்ணெய் வெட்டி! எங்கேயடா உன் மன்னன்! எங்கே ஒளித்து வைத்திருக்கின்ருய் சொல்!'' என்று மிரட்டிக் கேட்டான்.

உலக்கைராயனும் ''அடே வெண்ணெய்! எங்கேயடா உன் எஜமானர்? கொடிகளைப் பிடுங்கி வர இவ்வளவு நேரமா? அவனைச் சந்தித்து எங்கே ஒளிந்திருக்கச் சொல்லி விட்டு வந்திருக்கிருய்? மரியாதையாகச் சொல்லிவிடு. இல்லாவிட்டால் உன் தலை போய் விடும்'' என்ருன்.

மெய்க்காவலாளியோ ''ஐயா ராயரே. நான்தான் உங்கள் சேவகன் என்றேனே. இனியும் அந்த மன்னனுக்கா ஊழியம் செய்வேன்? என்னை நம்புங்கள். எனக்கு அவனைப்பற்றி எதுவுமே தெரியாது. எங்கேயாவது புதரில் ஒளிந்து கொண்டுதான் இருப்பான். தேடிக் கண்டு பிடித்து விடலாம்'' என்ருன்.

கரடி மனிதனே ''டேய் வெண்ணெய்! உன் பேச்சையா நம்புவது? உண்மையைக் கக்குகிருயா அல்லது உன் தலையைத் துண்டிக்கட்டுமா?'' என்று அவனைப் பிடிக்க ஓடினன். வெண்ணெய் வெட்டியோ சட்டென உலக்கைராயனின் முன்னல் ஓடி நின்று கொண்டு ''ஐயா, என்னைக் காப்பாற்றுங்கள். நான் உங்கள் ஊழியனயிற்றே'' என்று அலறினன்.

உலக்கைராயனே அவனைப் பிடித்து முன்னால் இழுத்து நிறுத்தி ''அடே! இவர் சொல்வது போல் உண்மையைச் சொல்லி விடு. எங்கே அந்த மோசக்கார மன்னன்! உனக்கு அவன் ஒளிந்திருக்கும் இடம் தெரியுமல்லவா! மரியாதையாகச் சொல்லிவிடு. இல்லாவிட்டால் என்ன நடக்கும் என்று நான் சொல்ல வேண்டுமா! இந்த கோடாலி உன் தலையை வெட்டி எறியும்'' என்ருன்.

வெண்ணெய் வெட்டியும் கதி கலங்கிப் போய் ''நான் கொடிகளைப் பிடுங்கப் போன போது அந்த மன்னனைச் சந்தித்தேன். அவன் தனது நாட்டில் பாதியை எனக்குக் கொடுப்பதாயும் இந்தக் காட்டிலிருந்து எப்படியாவது இருவரும் தப்பித்துப் போய் விடலாம் என்றும் சொன்னுன். தான் ஒளிந்திருக்கும் இடத்தை யாரிடமும் சொல்லக் கூடாது எனவும் சொன்ணுன்'' என்ருன்.

உலக்கைராயனும் 'கடகட' வென்று சிரித்து ''அடே வெண்ணெய் வெட்டி! சரியான வடிகட்டின முட்டாள் நீ! அவன் பேச்சை நம்பி விட்டாயா? உனக்குப் பாதி நாட்டையா கொடுக்கப் போகிருன்? தீட்டிக்கொண்டே இரு. அவன் உன்னைத் தலைநகருக்கு அழைத்துப் போனதும் தன் நாட்டை இரண்டாக்கித் தர மாட்டான். ஆனால் உன் உடலை இரண்டாக வெட்டி கழுகுகளுக்குப் போட்டு விடுவான் தெரியுமா?'' என்று கேட்டான்.



வெண்ணெய் வெட்டியும் உலக்கைராயரிடம் ''ஆமாம்! அப்படி அவன் செய்யக் கூடியவனே. அவன் சொன்னதற்கு 'ஆமாம்' என்று தலையை ஆட்டி விட்டு இங்கே வந்து விட்டேன். நான் ஒன்றும் அவனேடு சேர்ந்து தலைநகருக்குப் போகமாட்டேன்'' என்ருன்.

கரடி மனிதனே ''ஏய் வெண்ணெய்! யாரிடம் இந்தக் கதையை அளக்கிருய்? என் குருவான கரடிராயரை அவமதித்த அந்த மன்



ணுங்கட்டி மன்னனை நீதான் என் முன் கொண்டு வந்து நிறுத்த வேண்டும். என்ன செய்வாயோ ஏது செய்வாயோ எனக்குத் தெரியாது. நான் அவன் தலையை வெட்டி என் குருவின் பாதங்களில் சமர்பித்தாக வேண்டும். இப்படிச் செய்ய நீங்கள் உதவாவிட்டால் இங்கே இருப்பவர்களில் ஒருவன் கூட என்னிடமிருந்து தப்ப முடியாது. தெரியுமா?'' என்றான்.

அது கேட்டு உலக்கைராயன் கோபம் கொண்டு ''கரடியப்பா! உன்னால் ஒரே சமயத்தில் இரண்டு பேர்களின் தலைகளை வெட்ட முடியுமா?'' என்று சவால் விட்டான்.

அப்போது கரடி மனிதன் ''இந்தக் கோடாலியை அற்ப சொற்பமாக நினைத்து விட்டாயா? இது என் குரு எனக்கு அளித்த வரப் பிரசாதம். இதன் சக்திக்கு முன் எதுவும் நிற்க முடியாது. நீ உன் கல் கதையை இதோடு மோத விட்டுப் பார்க்கிறாயா?'' என்று கேட்டான்.

அதைக் கேட்ட உலக்கைராயன் ''நாம் சண்டை போட்டுக் கொள்வது ஒரு புறம் இருக்கட்டும். அந்த மோசக்கார மன்னனின் தலையைக் கொண்டு போகும் பிரச்னையை ஆறப்போடப் போகிறாயா? அதில்லாமல் நீ எப்படியப்பா உன் குருவின் முகத்தில் விழிக்க முடியும்?'' என்று கேட்டான்.

கரடி மனிதனும் ''ஆமாம் அவன் தலையை எப்படியாவது கொண்டு போயாக வேண்டுமே'' என்றான். அப்போது உலக்கைராயன் ''நாம் அனாவசியமாகச் சண்டை போட்டுக் கொண்டிருக்க வேண்டாம். எல்லோருமாகச் சேர்ந்து அந்த மன்னனைத் தேடிக் கண்டு பிடிப்போம். இப்போது அவன் வெண்ணெய் வெட்டி பார்த்த இடத்தில் கூட இருக்க மாட்டான். வேறு ஏதாவது ஓரிடத்திற்குப்போய் ஒளிந்து கொண்டிருப்பான்'' என்றான்.

கரடி மனிதனும் ''சரி, இப்போதே கிளம்பலாம். அவன் ரொம்ப தூரம் போயிருக்க முடியாது. வெண்ணெய்! நீ எங்கே அவனைப் பார்த்தாய்? அந்த இடத்தைக் காட்டு'' என்றான். எல்லோருமாக உடனே கிளம்பிச் சென்றார்கள்.

வெண்ணெய் வெட்டியும் ஓரிடத்தில் நின்று ''இந்த புதரின் பின்னால்தான் அவன் ஒளிந்து கொண்டான்'' என்றான். ஆனால் அங்கே உதயகிரி மன்னன் தென்படவில்லை. அப்போது உலக்கை ராயன் ''நான் சொன்னது சரியாகி விட்டது. பயல் வேறு எங்கேயோ ஓடிவிட்டான். தேடுங்கள்'' என்றான். எல்லோருமாக அப்பகுதியில் அங்கும் இங்குமாகப் போய்ப் பார்க்கலானார்கள்.

அப்போது ஓரிடத்திலிருந்து ''அடே. சட்டென அம்பை எய்து அதனைக் கொல். அப்போது தான் உனக்குப் பாதி நாடு கிடைக்கும்'' என்ற பலத்த குரல் கேட்டது. அது உதயகிரி மன்னனுடையது என்பது வெண்ணெய் வெட்டிக்கும் கரடி மனிதனுக்கும் உலக்கை ராயனுக்கும் தெரிந்து போயிற்று.

வெண்ணெய் வெட்டியும் ''அடடே பாதி நாட்டை இவன் வேறு யாருக்கோ தருவதாகக் கூறுகிறானே. எனக்குப் பாதி நாடு. இன்னொருவனுக்குப் பாதி நாடு என்றால் உதயகிரி மன்னனுக்கு என்ன மிஞ்சும்? ஒன்றுமே



இல்லையே'' என்றான். உலக்கை ராயனோ ''முதலில் அவனைப் பிடி. அப்போதுதான் உனக்குக் கிடைக்கப் போகும் பாதி நாட்டைப் பற்றி யோசிக்கலாம்'' என்றான். உடனே வெண்ணெய் வெட்டியும் உதயகிரி மன்னனின் குரல் வந்த இடத்தை நோக்கி ஓடினான்.

தன் மெய்க்காவலாளி வருவதைக் கண்ட உதயகிரி மன்னன் ''அடே! என்னை விட்டு எங்கே போகிறாய்? அதோ அந்தப் புலி என்மீது பாயப்போகிறது! அதைக் கொன்று தள்ளு'' என்றான்.

வெண்ணெய் வெட்டி யோசித்தவாறே ''அரசே, சற்று முன் யாருக்கோ பாதி நாட்டைக் கொடுப்பதாக உரக்கக் கத்தினீர்களே, யார் அவன்?'' என்று கேட்டான்.

உதயகிரி மன்னனும் ''இந்த வேடனுக்குத்தான். அவன் புலியைக் கொன்றால் பாதி நாட்டைத் தருவதாகக் கூறினேன். நீ தான் வந்துவிட்டாயே. நீயே கொன்று விடு'' என்றான்.

வெண்ணெய் வெட்டியோ "எங்கள் இருவருக்கும் பாதிப் பாதி நாட்டைக் கொடுத்து விட்டால் உங்களிடம் ஆள்வதற்கு நாடே இல்லையே" என்றான். அதுகேட்டு உதயகிரி மன்னன் ''என் நாட்டை இழந்தாலும் நானாவது உயிர் பிழைப்பேனே. அது போதும்'' என்றான்.

அப்போது வேடன் ''எனக்கு நாடும் வேண்டாம். ஒன்றும் வேண்டாம். இந்தப் புலியைக் கொல்கிறேன். பத்து தங்க நாணயங்கள் கொடுத்தால் போதும்'' என்று கூறி பாய்ந்துவரும் சிறுத்தைப்புலி மீது அம்பை எய்தான்.

அம்பு பட்டதும் சிறுத்தைப்புலி பலமாகக் கத்தி விழுந்தது. இதே சமயம் உதயகிரி மன்னன் பற்றித் தொங்கிய மரக்கிளையும் 'படபட' வென முறிந்து கீழே விழுந்தது.

(தொடரும்)






# அதிசய வீணை

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அங்கு தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே, இவ்வுலகில் எதனுடைய விலையையும் மதிப்பிடுவது எளிதல்ல. இதற்கு உதாரணம் சாந்திவர்மன் என்ற மன்னன். அவனது கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' எனக் கூறி கதை சொல்லலாயிற்று.

சந்தனபுரியை சாந்திவர்மன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவனுக்கு சங்கீதம் என்றால் மிகப் பிடிக்கும். அவன் தினமும் ஒரு பாடகரைப் பாடச் சொல்லி மகிழ்வான். ஆனால் ஒருநாள் பாடிய

## வேதாளம் சொல்லும் கதை



வன் அவன் சபையில் மறுநாள் பாடக்கூடாது. ஏனெனில் ஒருவன் பாட்டை அவன் கேட்டதும் அவனது குரலைவிட வேறு ஒருவனுடையது இன்னும் நன்ருக இருக்கக் கூடும் என அவன் எண்ணியதே யாகும்.

அதற்கு ஏற்றபடி பாடகர்கள் உற்சாகமிகுதியால் மன்னன் முன் பாட வரலாயினர். சிலரது குரல் கேட்க சகிக்க முடியாது போய் விடும். அப்படியும் அரசன் பாடகர்களைப் பாடச் சொல்லி தான் கேட்பதை நிறுத்தி விடவில்லை.

இப்படி இருக்கையில் சாந்திவர்மன் ஒரு நாளிரவு ஒரு கனவு கண்டான். அதில் சரஸ்வதி தேவி தோன்றி ''மன்ன, நீ தென்திசை காட்டிற்குப்போ. ஒரு பெரிய ஆல மரத்தடியே ஒரு சக்தி வாய்ந்த வீணையைக் காண்பாய். அதை எடுத்து வா. உன் முன் பாட வருபவர்களை அதற்கு முன்னல் அமர்ந்து பாடச்சொல். அந்த வீணை அவர்களது குரல் எப்படிப் பட்டது எனக் கூறிவிடும். பாடி முடிந்ததும் அந்தப் பாடகனும் வீணை கூறிய ஜீவராசியாக மாறி விடுவான்'' எனக்கூறி மறைந்து விட்டாள்.

சாந்திவர்மன் கண் விழித்துப் பார்த்தான். அருகில் வீணை எதுவும் இருக்கவில்லை. இது வரை தான் கண்டது கனவுதான் என யோசித்து முதலில் அசட்டையாக இருந்தான். ஆனல் பிறகு அது பற்றி யோசித்து ஒரு வேளை அதில் கண்டது எல்லாம் உண்மையாக இருக்கலாமோ என்று நினைக்கலானன்.

மறுநாளே சாந்திவர்மன் தான் கண்ட கனவு உண்மையா எனக் காணத் தென்திசையில் காட்டிற்குள் போய் குறிப்பிட்ட ஆல மரத்தை அடைந்தான். அங்கு ஒரு அழகான வீணை இருந்தது. அதை எடுத்து வந்து ''சபையில் பாட வருபவர்கள் இந்த வீணைக்கு முன் அமர்ந்து பாட வேண்டும். இது அவர்களது குரலைப் பற்றி

விமர்சிக்கும். இது கூறிய ஜீவராசியாக பாடகன் உடனே மாறி விடுவான் என்பதை நினைவில் வைத்துக் கொண்டே பாடகர்கள் பாட வர வேண்டும்'' என்று கூறினுன்.

அதைக் கேட்டவர்கள் எல்லோரும் ஆச்சரியப்பட்டார்கள். ஏனெனில் அது வரை அரசன் எந்தப் பாடகன் சபைக்கு வந்தாலும் அவனைப் பாடச் சொல்லி கேட்டு வந்தான். ஆனுல் இப்போது திடீர் என ஒரு வீணையைக் கொண்டு வந்து வைத்து அதற்கு முன் அமர்ந்து பாடகன் பாட வேண்டும் என்று கூறுகிருன். வீணைக்கோ ஏதோ ஒரு அற்புத சக்தி இருக்கிறதாம். அது தன் எதிரே உட்கார்ந்து பாடுபவனின் குரல் என்ன மாதிரி இருக்கிறது என்று கூறுமாம்.

வீணை அப்படிக் கூறி விட்டால் மறு நிமிடமே பாடகன் அது கூறிய ஜீவராசியாக மாறி விடுவாளும். இது என்ன வேடிக்கை! இதையும் தான் பார்க்கலாமே என்று எண்ணி முதல் நாளே மக்கள் திரளாக சபையில் கூடி விட்டார்கள்.

அன்று பாட வந்த பாடகன் வீணை முன் அமர்ந்து பாடினுன். அவன் பாட்டை முடித்ததும் வீணை ''இவன் குரல் கழுதைக் குரலாக இருக்கிறது'' என்றது. மறு நிமிடமே அவன் ஒரு கழுதையாக மாறி 'காள் காள்' எனக் கத்திய வாறே சபையை விட்டு ஓடினுன். அதற்கும் அடுத்த நாள் வந்த



பாடகர் பாடி முடித்த போது வீணை அவனது குரலை எருமை மாட்டின் குரல் என்றது. அந்த பாடகனும் ஒரு எருமையாக மாறி சபையிலிருந்து வெளியே ஓடினன்.

இதையெல்லாம் கண்டு சாந்திவர்மனின் மகள் கீதப்பிரியை வீணை முன் அமர்ந்து தன் இனிய குரலில் பாடினள். வீணையும் ''இவளது குரல் குயிலினுடையது போல் இருக்கிறது'' என்றது. மறு நிமிடமே அவள் ஒரு குயிலாக மாறி விட்டாள்.

இதைக் கண்ட சாந்திவர்மனுக்குக் கோபம் வந்தது. அவன் அந்த வீணையை எரித்து சாம்பலாக்கினன். வீணை எரிந்ததும் முன்பு கழுதையாயும் எருமையாயும், நாயாக குயிலாக மாறியவர்கள் மீண்டும் மனிதர்களாகி விட்டார்கள். தன் மகள் மீண்டும் பெண்ணுகி வந்தது கண்டு அவன் பெரு மகிழ்ச்சி அடைந்தான். வேதாளம் இந்தக் கதையைக் கூறி "சரஸ்வதிதேவி அளித்த வீணையால் இப்படிப்பட்ட விபரீத விளைவுகள் ஏன் ஏற்பட்டன? இதற்கு சரியான பதில் தெரிந்தும் நீ கூருவிட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூருகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''சாந்திவர்மனுல் உயர்ந்த சங்கீதம் எது எனக் காண முடியவில்லை. அவன் உண்மையான ரசிகனுக இருந்திருந்தால் எது உயர்ந்த சங்கீதம் எனக் கண்டு கொண்டிருப்பான். இதை உணர்த்தவே சரஸ்வதி தேவி அந்த வீணையை அளித்திருக்க வேண்டும். இனிய குரல் இருந்தாலே சங்கீதத்தை ரசிக்கலாம். அதை இந்த வீணை உணர்த்தியது'' என்ருன்.

மன்னனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே வேதாளமும் அவன் சுமந்து வந்த உடலோடு உயரக் கிளம்பி மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.





# நல்லதைச் செய்!

உலகநாதன் தர்மபுரத்தை அடைந்த போது அவ்வூரைச் சுற்றிலுமுள்ள வயல்களில் பயிர் களெல்லாம் தண்ணீர் பாய்ச்சப் படாமல் உலர்ந்து போவதைக் கண்டான். ஆனால் அவ்வூரின் அருகே இருந்த ஏரியில் நிறையத் தண்ணீர் இருந்தது. ஏனோ அந்த ஏரியின் தண்ணீரை அவ்வூரார் தம் வயல்களுக்குப் பாய்ச்சாமல் இருக்கிறார்கள் என்று அவன் எண்ணி ஆச்சரியப்பட்டான்.

இன்னும் கொஞ்ச தூரம் போனதும் ஒரு தோப்பிலுள்ள புளிய மரங்களுக்கும் வேப்ப மரங்களுக்கும் மாமரங்களுக்கும் சிலர் தண்ணீர் பாய்ச்சிக் கொண்டிருப்பதை அவன் கண்டான்.

அது பற்றி வயலில் நின்ற சில விவசாயிகளிடம் கேட்ட போது அவர்கள் ''ஏரி ஜமீன்தாரருடையது. அவர் எங்கள் வயல்களில் பாய தண்ணீர் விடுவதில்லை. மழை பெய்தால்தான் நாங்கள் விவசாயம் செய்ய முடியும். ஏரித் தண்ணீரை ஜமீன்தாரர் தன் தோப்பினுள்ள மரங்களுக்குப் பாய்ச்சிக் கொள்கிறார்'' என்றார்கள். அது கேட்டு உலகநாதன் ''ஏரி ஜமீன்தாரருடையதுதான். ஆனால் அதற்கு தண்ணீரை அவருடைய தாத்தாவா அவ்வப்போது அனுப்பி வைக்கிறார்?'' என்று கேட்டான்.

அப்போது குடியானவர்கள் ''ஜமீன்தாரருடைய தாத்தாவா? ஆகா! கர்ணன் அவர். முதலில் எங்கள் வயல்களில் நீரைப் பாய விட்டுப் பிறகே தன் உபயோகத்திற்குத் தண்ணீரை வைத்துக் கொள்வார். அந்தக் கஜேந்திரரின் மகன் மகேந்திரன் கூட தன்

சிதம்பரம் சின்னசாமி



அந்த ஊருக்கு தண்ணீர் கிடைக்க ஏதாவது வழி செய்து விட்டுப் போவது என்று தீர்மானித்துக் கொண்டான். ஜமீன்தாரரது மனதில் ஏதாவது ஒரு பீதியைக் கிளப்பி அவரது மனதை மாற்றி ஊராருக்கு நன்மை செய்வது என எண்ணினன்.

அவன் தினமும் ஜமீன்தாரர் ராஜேந்திரன் ஏரிக் கரையில் உலாவுவதைக் கண்டான். எனவே மறுநாள் அவன் சன்னியாசி போல வேடம் பூண்டு ஒரு சொம்பை எடுத்துக் கொண்டு அந்த ஏரியில் இடுப்பளவு ஆழ நீரில் நின்று கொண்டான். சொம்பால் தண்ணீரை எடுத்து அதைப் பார்த்து விட்டு 'கொட' 'கொட'வென்று கொட்டி விட்டு மறுபடியும் சொம்பை நீரில் அமுக்கி அதை எடுத்துப் பார்த்து மறுபடியும் கொட்டலானன். இப்படியே அவன் செய்து கொண்டே இருந்தான்.

அன்று ஏரிக் கரையில் உலாவிக் கொண்டிருந்த ராஜேந்திரன் அதைக் கண்டு ''சாமியாரே! ஏன் நீங்கள் தண்ணீரை எடுத்துப் பார்த்து விட்டு கொட்டிக் கொண்டே இருக்கிறீர்கள்?'' என்று கேட்டான்.

சன்னியாசியும் ''அதுவா? ஒரு காரணத்திற்காகத்தான். இதில்

வயல்களுக்கு நீர் பாய்ச்சிக் கொண்ட பின் எங்களுக்கு தண்ணீர் விட்டு வந்தார். ஆனல் இப்போது உள்ள ஜமீன்தாரர் ராஜேந்திரனே எல்லாத் தண்ணீரையும் தானே வைத்துக் கொண்டு எங்களுக்கு ஒரு சொட்டு கூட விட மாட்டேன் என்கிறர். இவரது தாத்தா சுயநலம் இல்லாமல் இருந்தார். இவரது தந்தையோ சுயநலம் பார்த்தாலும் பிறருக்கும் உதவினர். இவரோ மற்றவர்களைப் பற்றிக் கவலையே படவில்லை. என்ன செய்வோம் நாங்கள்? வானத்தை நம்பி வாழ வேண்டி இருக்கிறது'' என்று சொன்னர்கள். அதைக் கேட்ட உலகநாதன்

புதிய தண்ணீரை எடுக்க முயல் கிறேன். அது இந்தக் குளத்தில் அடியில் இருக்கிறது போலும். இந்த ஏரியில் முக்கால் பாகத்திற்கு மேல் பழைய தண்ணீர்தான் இருக் கிறது. மேல் உலகிலிருந்து சிர மப் பட்டு நான் வந்தும் கூடப் பயனில்லையே. பாவம்! அவர் அப் படியே சொர்க்கத்திற்கும் போகா மலும் நரகத்திற்கும் போகாமல் ஊசலாடிக் கொண்டுதான் இருக்க வேண்டுமா? அவரை சொர்க்கத் திற்கு அனுப்ப இந்த சொம்பு நிறைய புதிய தண்ணீர் இந்த ஏரி யிலிருந்து கிடைக்காது போலிருக் கிறதே'' என்ருர்.



அதைக் கேட்ட ராஜேந்திரன் ''மேல் உலகமா? புதிய தண் ணீரா? அதுவும் இந்த ஏரியி லிருந்தா? யார் அப்படி ஆகாயத் தில் ஊசலாடுகிருர்?'' என்று கேட் டான்.

அதற்கு சன்னியாசி ''நான் சொர்க்க லோகத்திலிருந்து வரு கிறேன். என்னை இந்த ஜமீனின் முந்தைய ஜமீன்தாரரான கஜேந் திரன் அனுப்பினுர். அவருடைய மகனுன மகேந்திரன் சொர்க்கத் திற்கும் போக முடியாமல் நரகத் திற்கும் போக முடியாமல் ஊச லாடுகிருர். இதிலிருந்து புதிய நீர் எடுக்க வேண்டும். இந்த ஏரி யிலோ பழைய நீரே உள்ளது. இப்போதைய ஜமீன்தாரர் இதன் நீரை யாரையும் உபயோகிக்க முடி யாமல் தடுத்து பழைய நீரைத் தேக்கி வைத்துவிட்டார். இதனுல் மகேந்திரனைப் புதிய தண்ணீரால் அபிஷேகம் செய்து சொர்க்கத் திற்கு அனுப்ப முடியாமல் போகி றது'' என்ருர்.

ராஜேந்திரனும் ''அந்த மகேந் திரனை சொர்க்கத்திற்கு அனுப்பும் சக்தி இந்த ஏரியின் தண்ணீருக்கு உள்ளதா?'' என்று கேட்டான். சன்னியாசியும் ''இந்த ஏரி நீரின் சக்தி பற்றி உமக்கு என்ன தெரி யும்? இதில் ஒரு ஊற்று இமயமலை யிலிருந்து வருகிறது. அதன் நீரைத்தான் நான் எடுத்துப் போக

முயல்கிறேன். ஏரி நிறையப் பழைய நீர் இருக்கும் வரை அது எப்படி முடியும்? இந்த நீரை இங்கே வாடும் பயிர்களுக்கு விட்டாலாவது ஏரி காலியாகும். இப்போதுள்ள ஜமீன்தாரருக்கும் புண்ணியம் கிடைக்கும். கஜேந்திரன் சுயநலமில்லாமல் தண்ணீர் விட்டு சொர்க்க லோகம் அடைந்தார். அவரது மகன் மகேந்திரன் முதலில் தன் வயல்களுக்குத் தண்ணீர் பாய்ச்சிக் கொண்டு பிறகே தண்ணீர் மற்றவர்களுக்கு விட்டார். இதனுல் சில வயல்களில் பயிர்கள் வாட அவருக்கு பாவம் வந்து சேர்ந்தது. அதைப் போக்கவே என்னை கஜேந்திரன் அனுப்பினுர். ஆனுல் இப்போதுள்ள ஜமீன்தாரரோ யாருக்குமே தண்ணீர் கொடுக்காமல் பாவ மூட்டையைச் சுமக்கிருரே. இவருக்கு எப்படி சொர்க்கம் கிடைக்குமோ?'' என்ருர். அதைக் கேட்ட ராஜேந்திரன் ''சுவாமி. நீங்கள் என்னை அறியமாட்டீர்கள். நானே தற்போதைய ஜமீன்தாரர். நீங்கள் குறிப்பிடும் மாபெரும் பாவி. என் தந்தை மகேந்திரர் நற்கதி அடைய இப்போதே வழி செய்கிறேன். ஏரி நீரை இப்போதே மற்றவர் வயல்களில் பாயச் செய்கிறேன். இனி புண்ணியகாரியங்களையே செய்கிறேன். நீங்கள் இந்த ஏரியின் அடியில் ஊறும் இமயமலை ஊற்றின் நீரை நாளையே எடுத்துச் செல்லலாம்'' எனக் கூறி உடனேயே ஏரி நீரை மற்ற வயல்களில் பாயச் செய்தான்.

ஏரியின் நீர் குறைய சன்னியாசியும் தன் சொம்பில் புதிய நீரை எடுத்துப் போவதை ராஜேந்திரன் பார்த்து திருப்தி அடைந்தான். பிறகு ஊருக்கு நல்லது செய்து அவன் புண்ணியவான் என்று பெயர் பெற்ருன். உலகநாதனும் தன் யுக்தி பலித்தது கண்டு மகிழ்ந்தான்.





# புதையலைக் காணோமே!

புதுப் பாளையத்தில் பொன்னையன் என்ற பணக்காரன் இருந்தான். அவனை குப்பண்ணன் என்பவனும் சுப்பண்ணன் என்பவனும் நண்பனாக்கிக் கொண்டார்கள். அவர்கள் இருவருக்கும் அவனது பணத்தின் மீதே கண். எனவே அவனிடம் அவர்கள் ''பொன்னையா, நீ ஏன் பணத்தைப் பெட்டியில் பூட்டி வைத்திருக்கிறாய்? பணத்தை வியாபாரத்தில் போட்டால் ஒன்றுக்குப் பத்து மடங்காகச் செய்யலாமே'' என்றார்கள்.

பொன்னையனோ ''எனக்கு வியாபாரத்தின் நெளிவு சுளிவு எல்லாம் தெரியாதே. அதனால் தான் என்னிடம் உள்ள பணத்தைக் கொண்டு வியாபாரம் செய்யவில்லை. வீணாகப் பணத்தை வியாபாரத்தில் போட்டு இழப்பதை விடப் பெட்டியில் போட்டுப் பூட்டி வைத்திருப்பதே மேல் என எண்ணியே அப்படிச் செய்தேன்'' என்றான். அதற்கு அவர்கள் ''நீ முதலைப் போடு. பணத்தைப் பற்றி நீ கவலைப்படாதே. நாங்கள் உத்திரவாதம் அளிக்கிறோம். வியாபாரத்தை எங்களிடம் ஒப்படைத்து விட்டு நீ நிம்மதியாக இரு. உன் முதலை ஒன்றுக்குப் பத்து மடங்காக்கிக் காட்டுகிறோம். எவ்வித நஷ்டமும் வராமல் நாங்கள் பார்த்துக் கொள்கிறோம். லாபம் கொள்ளையாகக் கிடைக்கும்'' என்றார்கள்.

பொன்னையனும் அவர்களது பேச்சைக் கேட்டு வியாபாரத்தில் தன் பணத்தைப் போட்டு தன் இரு நண்பர்களையும் வியாபாரத்தைக் கவனித்துக் கொள்ளச் சொன்னான். அவர்களும் அந்த முதலைக் கொண்டு வியாபாரம்

இராம. சுந்தரேசன்



கொஞ்ச நாட்களில் பொன்னை யன் நோய்வாய்ப் பட்டு படுத் தான். ஒரு நாள் அவன் குப்பண் ணனை அழைத்து ''குப்பண்ணா, வியாபாரத்தில் நஷ்டம் ஏற்பட்டு விட்டது. நானும் இனி பிழைக்க மாட்டேன். எனக்கு இருப்பது ஒரே வீடு. இந்த வீட்டில் நான்கு மூலைகளில் ஒவ்வொரு மூலையிலும் நான்கு செப்புக் குடங்களைப் புதைத்து வைத்திருக்கிறேன். அதில் ஒவ்வொரு குடத்திலும் ஆயிரம் ரூபாய் வீதம் மொத்தம் பதினாறு ஆயிரம் ரூபாய்கள் உள் ளன. என் மனைவி கஷ்டப்படும் போதெல்லாம் நீ அவளுக்குத் தெரியாமல் ஒவ்வொரு குடமாக எடுத்து அவளுக்கு செலவுக்குக் கொடு. இந்த ரகசியத்தை யாரி டமும் சொல்லாதே. சுப்பண்ண னிடம் கூடச் சொல்லாதே. நீ என் உயிருக்கு உயிரான நண்பன் என்பதால் உன்னிடம் இதைச் சொல்லி என் மனைவிக்கு நான் இறந்த பின் என் பணத்தால் உதவி செய்ய உன்னிடம் கேட்டுக் கொள்கிறேன். நீ ஒருவன்தான் என் ஆருயிர் நண்பன்'' என்றான்.

செய்து நல்ல லாபம் சம்பாதித் தார்கள். ஆனால் அதைப் பொன் னையனிடம் கொடாமல் நஷ்டம் வந்ததாகச் சொல்லி அவனுக்கு நாமம்' சாத்தி விட்டார்கள். முதலையும் லாபத்தையும் அவர்கள் தமக்குள் பங்கு போட்டுக் கொண்டு ஆளுக்கு ஐயாயிரம் ரூபாயாக எடுத்துக் கொண்டு விட்டார்கள்.

இது பொன்னையனுக்குத் தெரிந்து விட்டது. ஆனாலும் அதை வெளியே காட்டிக் கொள் ளாமல் தன் நண்பர்களிடம் எப் போதும் போலப் பழகினான். ஆனால் அவர்கள் இருவரும் பொன் னையனிடம் முன்னைப் போல அதிகமாக ஒட்டவில்லை.

அதைக் கேட்ட குப்பண்ணன் தன் மனதுள் ''அடேடே. இவ னிடம் இன்னமும் பணம் இருக் கிறதா? அதையும் நான் அடைய வேண்டும்'' என எண்ணிக் கொண்

டான். பொன்னேய்யனிடம் அவன் ''இது கூட நான் செய்ய மாட்டேனு! இதைப் பற்றி யாரிடமும் சொல்ல மாட்டேன். நீ கூறிய படி உன் மனைவி கஷ்டப்படும் போதெல்லாம் ஒவ்வொரு குடமாக எடுத்துக் கொடுக்கிறேன். அப்படியே செய்கிறேன்'' எனக் கூறி விட்டு விடை பெற்றுக் கொண்டு சென்றான்.

இதைப் போலவே சுப்பண்ணனே யும் பொன்னேய்யன் மறு நாள் அழைத்து குப்பண்ணனிடம் கூறியது போலவே சொல்லி அவனேயே தன் ஆருயிர் நண்பனுகக் கருதுவதாகக் கூறினுன். சுப்பண்ணனும் ''பொன்னேய்யா. நீ கொஞ்சமும் கவலைப்படாதே. இந்த ரகசியம் என்னிடமே இருக்கும் வேறு யாரிடமும் சொல்ல மாட்டேன். உன் மனைவி கஷ்டப்படும் போது நீ சொன்னது போலவே ஒவ்வொரு குடமாக எடுத்துக் கொடுக்கிறேன். நீ என் மீது வைத்துள்ள நம்பிக்கை வீண் போகாது. நான் உன் ஆருயிர் நண்பனுயிற்றே. இது கூடவா செய்யாமல் போவேன்'' என்று சொல்லி அவன் கோரிய உதவியைச் செய்வதாகக் கூறிப் போனுன்.

கொஞ்ச நாட்களில் பொன்னேய்யன் இறந்து போனுன். அதற்குக் கொஞ்ச நாட்களுக்குப்



பின் பொன்னேய்யனின் மனைவி குப்பண்ணனே அழைத்து ''என் கணவர் எதையும் விட்டுப் போகவில்லே. இந்த வீடுதான் உள்ளது இதை விற்றுப் பணமாக்கிக் கொண்டு என் காலத்தைக் கழிக்க எண்ணுகிறேன்'' என்ருன்.

அப்போது குப்பண்ணன் தானே வீட்டை இரண்டாயிரத்திற்கு வாங்கிக் கொள்வதாகக் கூறினுன். இதற்குள் சுப்பண்ணனுக்கு பொன்னேய்யனின் மனைவி தன் வீட்டை விற்கப் போவது தெரிந்து ஓடி வந்தான். அவன் தான் மூவாயிரத்திற்கு வாங்கிக் கொள்வதாகக் கூறினுன். குப்பண்ணன் விலேயை நாலாயிரத்திற்கு

உயர்த்த சுப்பண்ணன் ஐயாயிரம் என்ருன். குப்பண்ணன் பத்தாயிரம் எனவே சுப்பண்ணன் அயர்ந்து போய் விட்டான்.

ஆனுலும் அவன் குப்பண்ணனைத் தனியே அழைத்து ''பத்தாயிரத்திற்குக் கேட்டாயே. உன்னிடம் ஐயாயிரம் தானே இருக்கிறது'' என்ருன். அதற்கு குப்பண்ணன் ''நீ இன்று உன் ஐயாயிரத்தை எனக்குக் கடனுகக் கொடு. நாளையே உனக்கு அதை திருப்பிக் கொடுக்கிறேன்'' என்ருன்

சுப்பண்ணனே ''இந்தக் கதை வேண்டாம். இந்த வீட்டில் புதையல் இருக்கிறது. அதை நானும் எப்படியோ தெரிந்து கொண்டிருக்கிறேன். உனக்கும் தெரிந்திருக்கிறது. அதனுல்தான் நீ என்னேடு போட்டி போட்டுக் கொண்டு விலையை உயர்த்தினுய். போகட்டும். இப்போது நாம் இரண்டு பேருமாகச் சேர்ந்து பத்தாயிரத்திற்கு இதை வாங்கி விடலாம். இதிலுள்ள புதையலை நாம் பங்கு போட்டுக்கொள்ளலாம்" என்ருன்.

குப்பண்ணனும் ஐயாயிரம் போனுலும் எட்டாயிரம் தனக்குக் கிடைக்கப் போகிறதே என எண்ணிச் சம்மதித்தான். சுப்பண்ணனும் அது போலவே எண்ணினுன். குப்பண்ணனும் சுப்பண்ணனும் தாம் பொன்னையனை ஏமாற்றி சம்பாதித்த பத்தாயிரம் ரூபாயை பொன்னையனின் மனைவியிடம் கொடுத்து அந்த வீட்டை வாங்கிக் கொண்டார்கள்.

பொன்னையனின் மனைவியும் பணத்தை வாங்கிக் கொண்டு தன் பிறந்த ஊருக்குப் போய் விட்டாள். குப்பண்ணனும் சுப்பண்ணனும் அந்த வீட்டின் மூலைகளையெல்லாம் தோண்டித் தோண்டிப் பார்த்தார்கள். எங்கும் செப்புக் குடங்கள் இருக்கவில்லை. அவர்கள் இருவரும் ஏமாந்து போய் ஒருவர் முகத்தை மற்றவர் பார்த்துக் கொண்டு நின்ருர்கள் !





# சியவனர்

சியவன முனிவர் பிருகு மகரிஷியின் மகன். அவர் கடுந்தவம் செய்து கிழப்பருவம் அடைந்து விட்டார். அவர் தவம் செய்த போது சுற்றிலும் புற்று ஏற்பட்டது. அந்தப் புற்றிலிருந்து அவரது தவசக்தியால் ஒளி 'பளிச்பளிச்' சென்று வீசிக்கொண்டிருந்தது.

அந்தப் பகுதிக்கு சர்யாதி என்ற மன்னன் தன் மகள் சுகன்யையோடு வந்தான். புற்றிலிருந்து ஒளி வருவது கண்டு பாம்போ என எண்ணி குச்சியால் சுகன்யை குத்திப் பார்த்தாள்.

இதனுல் சியவனரின் தவம் கலைந்தது. அவர் சுகன்யையும் அவளது தந்தையையும் மற்ற வீரர்களையும் அங்கே நிலத்தோடு நிலமாக ஒட்டியிருக்கும்படி சபித்தார். அப்போது சர்யாதி தன் மகள் தெரியாமல் செய்த குற்றத்தை மன்னிக்குமாறு அவரிடம் வேண்டினுன். சியவனரோ தன்னை சுகன்யை மணந்துகொண்டால் எல்லோருக்கும் சாபத்திலிருந்து விடுதலை என்ருர். சுகன்யையும் அவரைமணக்க எல்லோரும் சாபத்திலிருந்து விடுதலை பெற்றனர்.

சியவனர் மிகவும் முன்கோபி. சுகன்யை பொறுமையுடன் அவருக்கு பணிவிடைகள் செய்து அவரது பாராட்டைப் பெற்ருள். ஒரு முறை அசுவினி தேவதைகள் அங்கு வந்து சுகன்யையைப் பார்த்து ''நீயோ அழகி. ஏன் கிழவனேடு வாழ்கிருய்? எங்களில் ஒருவனை மணந்துகொள்'' என்றனர்.

சுகன்யை அவர்கள் கூறியதை அப்படியே சியவனரிடம் கூறினுள். அவரும் ''ஓ! அப்படியே செய்'' என்ருர்! ஆனுல் அவர் அசுவினி தேவர்களிடம் ''முதலில் என்னை

வாலிபனுக்கி, பிறகு சுகன்யையை மணக்க வேண்டும்'' என்றார்.

அசுவனி தேவர்கள் சியவனரை அழைத்துக்கொண்டு அருகிலுள்ள குளத்திற்கு சென்றார்கள். அதில் மூவரும் மூழ்கி எழுந்தனர். மூவரும் ஒரே அச்சில் வார்த்த வாலிபர்களாக அப்போது மாறிவிட்டனர். இது சுகன்யைக்குப் பரீட்சை. அவர்கள் சுகன்யையிடம் ''நீ எங்களில் ஒருவரைத் தேர்ந்தெடுத்து மணந்துகொள்'' என்றனர்.

சுகன்யையும் சியவனரையே மனதில் நினைத்து அவர்களில் ஒருவரைக் குறிப்பிட்டாள். அவள் குறிப்பிட்ட வாலிபன் சியவனரே. அசுவினி தேவர்கள் அவர்களை ஆசீர்வதித்து சென்றனர்.

அப்போது அங்கு வந்த சர்யாதி தன் மகள் கிழவரான சியவனரோடு வாழாமல் ஒரு வாலிபனோடு வாழ்க்கை நடத்துவது கண்டு மனம் வருந்தி நின்றான். அப்போது சுகன்யை நடந்ததெல்லாம் சொன்னாள். சியவனரும் அவன் உதவியால் ஒரு யாகம் செய்து அதில் அவிர்பாகத்தை அசுவினி தேவர்களுக்குக் கொடுத்தார்.

அவிர்பாகம் பெற அவர்களுக்கு என்ன அருகதை என்று இந்திரன் கோபப்பட்டு சியவனர் மீது வச்சிராயுதத்தை வீசினான். அதை அவர் பயனற்றுப் போகச் செய்து இந்திரன் உயர்த்திய கையை அப்படியே இருக்க சபித்தார். பின்னர் அவர் சாபத்தைப் போக்கினார்.

சியவனர் ஒருமுறை செம்படவர் வலையில் அகப்பட்டார். அவர்கள் அவரை விடுவித்து போகச் சொல்லவே அவர் ''நான் உங்கள் வலையில் மீன் போல் அகப்பட்டேன். எனவே நான் உங்கள் உடைமை'' என்றார். அவர்கள் அவரை நகுஷ மன்னனிடம் விற்கப் போனார்கள். அவனும் “பிராம்மணன் ஒரு பசுவுக்கு சமம்” எனக்கூறி அவர்களுக்கு ஒரு பசுவைக் கொடுத்து அனுப்பினான்.





# பரசுராமர்

கார்த்த வீரியன் என்ற மன்னன் காட்டில் வேட்டையாடப் போய் ஜமதக்னி முனிவரின் ஆசிரமத்தை நாசமாக்கினன்.



அப்போது முனிவரின் மகனுன பரசுராமர் ஆசிரமத்தில் இருக்க வில்லே. அவர் வந்ததும் நடந்ததை அறிந்து தம் கோடாலியோடு அந்த மன்னனின் அரண்மனேக்குள் போய் அவன் தலையை வெட்டி எறிந்தார்.



மறுநாள் கார்த்த வீரியனின் மைந்தர்கள் ஜமதக்னி முனிவர் தவம் செய்யும் இடத்திற்குப்போய் அவரைக் கொன்ருர்கள். அப்போதும் பரசுராமர் அங்கே இருக்கவில்லே.



ஆனால் அதற்கடுத்த நாளே பரசு ராமர் கார்த்தவீரியனின் புதல்வர் களைத் தேடிப்பிடித்துத் தன் கோடாலியால் கொன்றுவிட்டார். அவரது சக்திக்குமுன் அவர்களால் எதுவும் செய்ய முடியவில்லை.



அதுமுதல் அவர் க்ஷத்திரியர்களை எல்லாம் கொன்றார். அதனால் பல கொடிய மன்னர்கள் அழிந்து மக்கள் சுகம் அடைவார்கள் என அவர் எண்ணினார்.



பரசுராமர் இருபத்தோரு முறை க்ஷத்திரியர்களைக் கொன்று அவர் களது இரத்தம் நிரம்பிய குழி யருகே அமர்ந்து தன் தந்தைக்குத் தர்ப்பணம் விட்டார்.



ஆனால் அதற்கடுத்த நாளே பரசு ராமர் கார்த்தவீரியனின் புதல்வர் களைத் தேடிப்பிடித்துத் தன் கோடாலியால் கொன்றுவிட்டார். அவரது சக்திக்குமுன் அவர்களால் எதுவும் செய்ய முடியவில்லை.

அதுமுதல் அவர் க்ஷத்திரியர்களை எல்லாம் கொன்றார். அதனால் பல கொடிய மன்னர்கள் அழிந்து மக்கள் சுகம் அடைவார்கள் என அவர் எண்ணினார்.





பரசுராமர் இருபத்தோரு முறை க்ஷத்திரியர்களைக் கொன்று அவர்களது இரத்தம் நிரம்பிய குழியருகே அமர்ந்து தன் தந்தைக்குத் தர்ப்பணம் விட்டார்.



பின்னர் அவர் ஒரு பெரிய யாகம் செய்து தான் வென்ற நாடுகளை எல்லாம் கசியபருக்கு தானம் கொடுத்துவிட்டு மகேந்திர மலைக் குத் தவம் செய்ய சென்று விட்டார்.



கொடுங்கோல் மன்னர்கள் பூவுலகிலிருந்து ஒழிந்தாலும் ராட் சஸர்களின் தொல்லை இருந்தது. அவர்கள் மக்களைத் துன்புறுத்தி வந்தார்கள்.



இதுகண்டு பரசுராமர் சிவனைப் பிரார்த்தித்து ராட்ஸர்களை எல் லாம் கொல்லும் சக்தி பெற்று மகேந்திர மலையிலிருந்து இறங்கி வந்தார்.



சிவனால் மேலும் பலம் பெற்ற பரசுராமர் பூவுலகைத் துன்புறுத்திய ராட்சஸர்களை ஒழித்து உலகில் அவர்களது பயமே இல்லாமல் செய்தார்.



அப்போது வாலிபரான இராமர் சிவனாரின் வில்லை ஒடித்து சீதையை மணந்து கொண்டு மிதிலையிலிருந்து அயோத்திக்குச் சென்று கொண்டிருந்தார்.



தான் ஆராதித்த சிவனின் வில்லை ஒருவன் ஒடிப்பதா என்று கோபம் கொண்டு பரசுராமர் ராமரை எதிர்த்தார். தன்னிடமுள்ள விஷ்ணுவின் வில்லை வளைக்கச் சொன்னார். இராமர் அதனை எளிதில் முறித்தார். அப்போது ராமரும் தன் போல் அவதார புருஷரே எனக்கண்டு பரசுராமர் தன் சக்தியை எல்லாம் ராமருக்கே கொடுத்து விட்டார்.



# கருடாழ்வார்

கசியபரின் மனைவி வினதையின் மகன் கருடன். கசியபரின் மற்றொரு மனைவியான கத்துருவிற்கும் அவளது புதல்வர்களான நாகர்களுக்கும் அவன் அடிமை போல வேலை செய்து வந்தான். ஒருமுறை கருடன் நாகர்களைச் சுமந்து கொண்டு ஆகாயத்தில் செல்கையில் அவர்கள் கீழே விழுந்தார்கள். இது கண்டு கத்துரு கருடனைக் கோபித்துக் கொண்டாள்.

அப்போது கருடன் தன் தாயிடம் ''ஏன் அம்மா இவர்களுக்கு நாம் அடிமை போல இருக்கிறோம்'' என்றான். அவளும் தான் ஒருமுறை கத்துருவிடம் பந்தயம் போட்டுத் தோற்றதில் அப்படி அடிமையாக வேண்டியதாயிற்று எனக் கூறினாள்.

கருடன் உடனே கத்துருவிடம் போய் ''நாங்கள் இனி அடிமைகளாக இருக்க மாட்டோம். எங்களை விடுதலை செய்'' என்றான். அவளோ ''நீ எனக்கு அமிர்தம் கொண்டு வந்து கொடுத்தால் விடுதலை செய்கிறேன்'' என்றாள்.

அதற்கு கருடன் சம்மதித்து அமிர்தம் கொண்டுவர தேவலோகத்திற்குப் போனான். ஆனால் அமிர்தத்திற்கோ பலத்த காவல் இருந்தது. அதைச்சுற்றி அக்கினி சுவாலை வீசிக்கொண்டிருந்தது. அதன்மீது ஒரு சக்கரம் சுற்றிக் கொண்டிருந்தது. அதன் இருபுறங்களிலும் இரு பாம்புகள் காவல் புரிந்து கொண்டும் இருந்தன.

கருடன் அந்தக் காவலாளிகளை வென்று நெருப்பை அணைத்து, தந்திரமாக சக்கரத்தின் கீழே போய், பாம்புகளைக் கொன்றுவிட்டு அமிர்தத்தை எடுத்துக்

வே. தேசிகன்

கொண்டு போனான். இது கண்டு இந்திரன் தன் வச்சிராயுதத்தை கருடன் மீது வீசினான். அது பட்டும் அவனது இறகு ஒன்றுதான் உதிர்ந்தது. கருடன் பலம் கண்டு இந்திரன் அவனோடு சமாதானம் செய்து கொண்டு சென்றான். ஆனால் அமிர்தத்தை யாரும் சாப்பிட்டு விடாமல் பார்த்துக் கொள்ளுமாறு வேண்டினான்.

கருடனும் அவ்வாறே செய்வதாகக் கூறி அமிர்தத்தை கத்துரு வின்முன் வைத்து ''இதோ அமிர்தம் கொண்டு வந்து விட்டேன்'' என்றான். கத்துரு உடனேயே கருடனும் அவன் தாயும் இனி தன் அடிமை அல்ல எனக்கூறி விடுதலை அளித்தாள்.

கத்துரு தன் புதல்வர்களை அமிர்தம் சாப்பிட அழைத்தாள். அதற்குள் அப்பாத்திரத்தைத் தூக்கிப் போய் கருடன் சொர்க்கத்திலேயே வைத்து விட்டான். அமிர்த பாத்திரத்தை நக்க முயன்ற நாகர்கள் கீழே இருந்த தர்ப்பைப் புல்லால் தம் நாக்குகளை இரண்டாகப் பிளந்து கொண்டதுதான் மிச்சம்.

தேவர்கள் கருடனைப் பாராட்டினார்கள். விஷ்ணு அவனைத் தன் வாகனமாக்கிக் கொண்டார். இந்திரன் பாம்புகளை அவனுக்கு இரையாகும்படி வரம் அளித்தான்.

இந்திரனின் தேரோட்டி மாதலி. அவன் மகள் குணகேசி. சுமுகன் என்ற நாகனுக்கு அவளை மணம் செய்து வைக்க மாதலி தீர்மானித்தான். ஆனால் சுமுகனை கருடன் சாப்பிடப் போகிறான் எனக் கேள்விப்பட்டு இந்திரனிடமும் விஷ்ணுவிடமும் முறையிட்டான். அவர்கள் சுமுகனைக் காப்பதாக வாக்களித்தார்கள். இதைக் கேட்டு கருடன் கர்வத்தோடு ''இவர்களால் என்ன செய்ய முடியும்?'' எனக் கூறினான். உடனே விஷ்ணு தன் கையால் கருடனை அழுத்த, கருடன் அலறி தன் கர்வத்தை விட்டொழித்தான்.






# மந்திரச் சங்கிலி

ரங்கபுரியின் மன்னர் சிவபுரியின் அரசகுமாரி கிரிஜாவை மணந்து கொண்டார். ஆனல் பல வருடங்களாகியும் அவர்களுக்கு குழந்தையே பிறக்காததால் அவரை இன்னெரு கல்யாணம் செய்து கொள்ளும்படி எல்லோரும் வற்புறுத்தினர்கள். அவரும் மோகனு என்பவளை மணந்து கொண்டார். மோகனு பொறாமைக்காரி. துர்க்குணங்கள் நிரம்பியவள்.

மோகனுவை மணந்து கொண்ட பின்னும் மன்னருக்குக் குழந்தை பிறக்கவில்லை. மன்னனுக்கு அப்போது ஏதாவது தெய்வீக சக்தியால்தான் தனக்கு குழந்தை கிடைக்க வேண்டும் என்ற நம்பிக்கை ஏற்பட்டது.

ஒருநாள் காட்டிற்கு அவன் வேட்டையாட போய் தன் ஆட்களினின்றும் தனியே பிரிந்து சென்றுவிட்டான். அவன் வெகு தூரம் போனபின் ஒரு ஆசிரமத்தைச் கண்டான். அதில் ஒரு யோகி இருந்தார். அவர் ரங்கபுர மன்னனைத் தன் விருந்தினராக இருக்கச் சொல்லி உபசரித்தார். அவனது மனக்குறையை அவர் அறிந்து ஒரு தங்கச் சங்கிலியை எடுத்து அவனிடம் கொடுத்து ''நீ இதை உன் முதல் மனைவியின் கழுத்தில் போட்டு வை. கொஞ்சகாலத்திற்குப் பிறகு அவள் கர்ப்பவதி ஆவாள். பிறகு ஒரு ஆண் குழந்தையைப் பெற்றெடுப்பாள். அப்போது இந்தச் சங்கிலியை எடுத்து அந்தக் குழந்தையின் கழுத்தில் போட்டுவிட வேண்டும். இந்தச் சங்கிலி அவன் கழுத்திலிருந்து எடுக்கப்பட்டால் அவன் உயிரற்றவனுக இருப்பான். மறுபடியும் இந்தச் சங்கிலியை அவன் கழுத்

இந்திரஜால வித்தையாளர் ஏ. சி. சர்க்கார் ·



தில் போட்டால் அவன் உயிர் பெற்று எழுவான்'' என்றார்.

ரங்கபுர மன்னனும் யோகி கூறியபடியே சங்கிலியைத் தன் முதல் மனைவி கிரிஜாவின் கழுத்தில் போட்டான். அவளும் கொஞ்ச நாட்களில் கர்ப்பமுற்று உரிய காலத்தில் ஒரு ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். குழந்தை பிறந்த போது ஆடாமல் அசையாமல் இருந்தது. ஆனால் அதன் கழுத்தில் யோகி கொடுத்த சங்கிலியைப் போட்டதும் சிரித்துக் கை கால்களை ஆட்டியது.

கிரிஜாவிற்கு மந்திரச் சங்கிலியை மன்னன் கொடுத்து அணிந்து கொள்ளச் சொன்னது மோகனாவுக்கு எரிச்சலை அளித்தது. மன்னன் தனக்கு அச்சங்கிலியைக் கொடுக்காமலும் அதனைத் தன்னிடம் ஒரு வார்த்தை கூடக் கேட்காமல் கிரிஜாவிடம் கொடுத்ததற்காகவும் கோபமும் ஆத்திரமும் கொண்டிருந்தாள்.

இதனை அறிந்த மன்னன் கிரிஜாவிற்குப் பிறந்த குழந்தைக்கு மோகனா ஏதாவது கெடுதல் செய்ய முற்படுவாள் எனச் சந்தேகித்து எச்சரிக்கையுடன் இருந்தும் மோகனாவைக் கண்காணித்தும் வந்தான்.

கிரிஜாவைக் காணவே விரும்பாத மோகனா அவளுக்கு குழந்தையைப் பெற்று விட்டாள் என்று கேட்டதும் மேலும் வெறுப்பையே அடைந்தாள். இதைத் தெரிந்து கொண்ட மன்னன் அந்தக் குழந்தையை அவள் எதுவும் செய்து விடாதபடி தக்க ஏற்பாடுகளைச் செய்தான். அவனுக்கு விஜயன் என்ற பெயர் வைத்து நன்கு வளர்த்து பெரியவனான்.

சில ஆண்டுகள் கழிந்தன. ரங்கபுர மன்னன் இறந்து விடவே அரசகுமாரனைக் காக்கச் செய்த ஏற்பாடுகள் சற்றுத் தளர்ந்தன. அப்போது ஒரு நாள் இரவு மோகனா எல்லோரும் தூங்கிக் கொண்டிருக்கையில் விஜயனின் கழுத்திலிருந்து சங்கிலியைக் கழற்றி எடுத்து

ஒளித்துவிட்டாள். அதனுல் அவன் இறந்தவன் போலக் கிடந்தான்.

மோகனு அவனைப் பாம்பு தீண்டி விட்டதாகக் கூறி அவனது உடலை எரிக்க ஏற்பாடுகளைச் செய்யுமாறு மந்திரியிடம் கூறினுள். ஆனுல் கிரிஜா தன் மகனின் கழுத்தில் சங்கிலி இல்லாதது கண்டு மந்திரியைத் தனியே அழைத்துப் போய் அவனது உயிர் ரகசியங்களைக் கூறி தன் மகன் இறக்கவில்லை என்று கூறினுள்.

மந்திரிக்கு மோகனுவைப் பற்றி நன்கு தெரியும். எனவே அவளே சங்கிலியைத் திருடி இருப்பாள் என எண்ணி அரசகுமாரனின் உடலையும் மூத்த ராணியையும் அவனது பிறந்த ஊரான சிவபுரிக்கே அனுப்ப ஏற்பாடு செய்தான்.

ஆனுல் மோகனுவிடம் அரசகுமாரனின் உடலை அவ்வூர் ஆற்றின் எதிர்க்கரையில் உள்ள மயானத்தில் எரிப்பதாயும் அங்கு மக்கள் கூட்டம் அனுவசியமாகக் கூடாது எனக் கூறி அன்றிரவே விஜயனின் உடலை ஒரு படகில் ஏற்றி அதில் மூத்த ராணியையும் உட்கார வைத்துக் கொண்டு போனுன்.

மந்திரியின் முன்னேற்பாட்டின்படி விஜயனின் உடலோடு கிரிஜா தன் பிறந்த ஊருக்குப் போய் விட்டாள். மந்திரியோ திரும்பி வந்து



கிரிஜாவும் விஜயனின் உடலும் படகு ஆற்றின் நடுவில் கவிழ்ந்ததால் அடித்துச் செல்லப்பட்டதாகக் கூறினுன். அந்த இரு உடல்களைத் தேடிப் பார்க்க மோகனு சொன்னுள். ஆனுல் உடல்கள் கிடைக்கவில்லை. மந்திரியோ அவை கடலுக்குள் அடித்துச் செல்லப்பட்டிருக்கும் எனக் கூறினுன்.

மோகனுவோ விஜயனின் உடலைச் சுட்டுப் பொசுக்கிச் சாம்பலாக்கி அதைத் தன் கண்ணுல் கண்டு மகிழ வேண்டும் என எண்ணி இருந்தாள். ஏனெனில் அவள் தனக்கு ஒரு குழந்தை பிறக்காமல் தன் சக்களத்தியான கிரிஜாவுக்கு ஒரு மகன் பிறந்து



அவன் நாட்டை ஆள்வதா என்றே பொருமைப்பட்டாள்.

ஆனல் எல்லாமே நாம் எண்ணியபடியே நடந்து விடுகிறதா? மந்திரியின் கூரிய அறிவால் கிரிஜாவும் விஜயனும் மோகனுவுக்குக் கிடைக்காமல் தப்பிப் போய் விட்டார்கள். மந்திரி அம்மாதிரி அவர்கள் தப்பி ஓட வழி செய்தார் என்பது மோகனுவுக்குத் தெரியாது. அவள் மந்திரி அவர்கள் ஆற்றில் அடித்துச் செல்லப்பட்டார்கள் என்று கூறியதை முழுக்க முழுக்க நம்பி விட்டாள்.

கிரிஜா தன் அண்ணனிடம் நடந்ததை எல்லாம் கூறி விஜயனின் உடலைப் பத்திரமாக வைத்திருக்கும்படி கூறினள். கிரிஜாவின் அண்ணனுக்கு வைதேகி என்ற மகள் இருந்தாள். அவளை விஜயனுக்குக் கல்யாணம் செய்து வைப்பது என்று பேச்சுவார்தை நடந்து முடிந்தும் இருந்தது.

திடீரென இப்படி நடக்கவே வைதேகி தானே எப்படியாவது மோகனுவிடமிருந்து மந்திரச் சங்கிலியை எடுத்து வருவதாகக் கூறிக் கிளம்பிச் சென்ருள். அவள் கிளம்புமுன் கிரிஜாவிடம் அந்த சங்கிலியைப் பற்றிக் கேட்டு அது போன்ற தங்கச் சங்கிலி ஒன்றையும் செய்து எடுத்துக் கொண்டு போனுள்.

ரங்கபுரத்தையடைந்த வைதேகி அரண்மனையில் மோகனுவின் காலில் ஏதோ தீராத புண் இருப்பது கேள்விப்பட்டாள். அதை எந்த வைத்தியனுலும் குணப்படுத்த முடியவில்லை. வைதேகி அரண்மனைக்குப் போய் தனக்கு வைத்தியம் தெரியும் என்றும் தான் அவளது கால்ப் புண்ணை குணப்படுத்துவதாகவும் மோகனுவிடம் கூறினள். ஆனல் தான் போடும் மருந்து நோயாளியின் உடலின் மீது தங்க நகை எதுவும் இல்லாமல் இருந்தாலே பலன் அளிக்கும் எனக் கூறினள்.

உடனே மோகனு தன் கை வளையல்களையும் மோதிரங்களையும்

கழற்றி வைத்தாள். ஆனல் தான் கழுத்தில் போட்டிருந்த சங்கிலியை மட்டும் கழற்றவில்லே. இதைக் கவனித்தும் கவனியாதது போல வைதேகி அவள் காலில் மருந்தைத் தடவி விட்டு மறு நாள் வந்து பார்ப்பதாகக் கூறி விட்டுத் தன் பையுடன் போனுள்.

மறுநாள் வைதேகி வந்த போது ''என் புண்ணே ஆற்றவில்லேயே'' என்ருள். அப்போது வைதேகி அவளே மேலும் கீழும் பார்த்து ''ஓ! நீங்கள் கழுத்தில் போட்டி ருக்கும் சங்கிலியைத் கழற்ற வில்லேயா? நானே எடுத்து விட்டு இன்று மருந்து போடுகிறேன்'' எனக் கூறி சட்டென மோகனுவின் கழுத்திலிருந்து சங்கிலியை எடுத்து ஒரு காகித உறைக்குள் போட்டுக் கட்டித் தன் பையில் வைத்துவிட்டு களிம்பை எடுத்துத் தடவினுள்.

மோகனுவுக்குத் தன் கழுத்திலி ருந்து தன் சங்கிலி போய் விட் டதே என்ற கலக்கம் ஏற்பட்டது. ஆனல் வைதேகி மருந்தைத் தடவி முடித்ததுமே தன் பையைத் தடவி காகிதப் பொட்டலத்தை எடுத்து சங்கிலியைக் எடுத்து மோகனுவின் கழுத்தில் போட்டு விட்டு மறு நாளேக்குள் புண் ஆறி விடும் என்று கூறி விட்டுப் போனுள்.

வைதேகி மோகனுவின் கழுத் தில் போட்டது தான் செய்து



கொண்டு வந்திருந்த சங்கிலி. மோகனுவின் கழுத்திலிருந்து எடுத்த சங்கிலியை எப்படி காகி தத்தில் போட்டுக் கட்டினுளோ அதுபோலவே அந்தச் சங்கிலி யைக் கட்டித் தன் பையில் போட்டு வைத்திருந்தாள். மோகனுவிடம் சங்கிலியை மாற்றிக் கொடுத்து விட்டு மந்திரசக்தி வாய்ந்த சங்கிலி யோடு அரண்மனேயை விட்டுப் போய் அன்றே சிவபுரத்திற்குக் கிளம்பிச் சென்ருள்.

மோகனுவுக்கு சங்கிலி மாற்றப் பட்டது தெரியவில்லே. ஏனெனில் அவளுக்கு வைதேகி யாரென்றும் எங்கிருந்து வந்தவள் என்பதும் தெரியாதே. அவளே வைத்தியம்

செய்பவள் என்றே நம்பினுள். அவள் சங்கிலியை மறுபடியும் அணிவித்துப் போனதால் அவள் மனதில் கொஞ்சமும் சந்தேகம் ஏற்படவில்லை.

வைதேகியோ சங்கிலி கிடைத்ததுமே ஒரு நிமிடமும் தாமதியாமல் அந்த ஊரை விட்டுக் கிளம்பிப் போய் விட்டாள். ஒரு வேளை மோகனுவுக்குச் சங்கிலி மாறியது தெரிந்தாலும் அவள் தன்னைப் பிடிக்க முயன்ருல் அவளுக்கு அகப்படாமல் வெகு தூரம் போய் விட வேண்டியது என்பதே அவளது திட்டம். அதன்படியே அவள் செய்தும் விட்டாள்.

அங்கு அந்த சங்கிலியை அவள் கிரிஜாவிடம் கொடுக்க அவளும் அதனை விஜயனின் கழுத்தில் போட்டாள். மறு நிமிடமே விஜயன் தூங்கி எழுந்தவன் போல எழுந்து உட்கார்ந்தான். எல்லோரும் மகிழ்ந்து போயினர். விஜயனுக்கும் வைதேகிக்கும் விரைவில் திருமணமும் நன்கு நடந்தேறியது. சில நாட்களுக்குப் பிறகு விஜயன் தன் தாயாருடனும் மனைவியுடனும் ரங்கபுரத்திற்குக் கிளம்பிச் சென்ருன். அங்கு மூத்த ராணியையும் இளவரசனை விஜயனையும் மந்திரி வரவேற்ருர். மக்களும் ஜெயகோஷம் போட்டார்கள்.

மோகனு திடுக்கிட்டுப் போனுள். விஜயனையும் அவன் மனைவி வைதேகியையும் பார்த்தாள். இதற்குள் அவளைக் கைது செய்ய மூத்த ராணியும் இளவரசனும் கூறவே அவள் கைது செய்யப்பட்டு பாதாள சிறையில் தள்ளப்பட்டாள்.

விஜயன் ரங்கபுரத்து மன்னனுகி வெகுகாலம் வரை நாட்டை நன்கு ஆண்டு வந்தான். வைதேகியின் கூரிய அறிவால் விஜயனும் பிழைத்தான். அவனுக்கு அவனுடைய நாடும் கிடைத்தது. சுக வாழ்வும் அவன் அடைந்தான்.





# நன்கொடை பெயர்ந்தது!

தர்மபுரத்தில் தனபாலன் பெரிய பணக்காரன். பணத்தை வட்டிக்கு விட்டு நிறையச் சம்பாதித்து வந்தான். அந்த ஊரில் அவனிடம் கடன் வாங்காதவனே இல்லை எனலாம். ஆனால் அவன் யாருக்கும் ஒரு காசு கூட தர்மமாகவோ நன்கொடையாகவோ தந்து விடமாட்டான்.

ஒருமுறை கதாகாலட்சேபம் செய்யும் பெரியவர் ஒருவர் தர்மபுரத்திற்கு வந்தார். அவ்வூரில் பேரும் புகழுமாயும் பணக்காரனும் உள்ள தனபாலனைக் கண்டு தான் அவ்வூரில் புராண உபன்னியாசம் செய்ய விரும்புவதாயும் அதற்கு அவர் உதவ வேண்டும் என்று கேட்டார்.

தனபாலனும் இன்று ஆகட்டும், நாளை ஆகட்டும் எனக் கூறி இரண்டு நாட்கள் தட்டிக் கழித்தான். மூன்றாவது நாள் அவர் தனபாலனிடம் ''நானும் வந்து இரண்டு நாளாகி விட்டது. என் கைப் பணமும் செலவாகி விட்டது. உங்களைப் போன்ற கொடையாளிகள் கவனித்தாலே இது மாதிரி புண்ணியங்களெல்லாம் சரிவர நடக்கும்'' என்று புகழ்ச்சியாகக் கூறினார்.

அந்த சமயம் தனபாலனிடம் கடன் வாங்க மாளிகைக் கடை மன்னார் வந்திருந்தான். தனபாலன் அவனிடம் ''பெரியவர் நம் ஊரில் புராண உபன்னியாசம் செய்ய வந்திருக்கிறார். வந்து இரண்டு நாட்கள் ஆகிவிட்டன. அவர் கையில் இருந்த பணமும் தீர்ந்து விட்டதாம். அவருக்கு இன்று சாப்பாடு போடுங்கள். உங்கள் வீட்டிற்கு அவரை அழைத்துப் போய் உபசரித்துத்

சாரதா ராமன்



தக்க ஏற்பாடு செய்யுங்கள்'' என்று சொன்னுன்.

மன்னுருக்கும் அப்போது பணம் தேவையாக இருந்ததால் தன பாலன் கூறியபடியே பெரியவரை அழைத்துக் கொண்டும் பணத்தை வாங்கிக் கொண்டும் போனுன். அன்று பெரியவருக்கு மன்னுரே சாப்பாடு முதலிய ஏற்பாடுகளைச் செய்து கொடுத்தான். அவரது பிரசங்கம் கோவிலின் முன் நடக்க ஏற்பாடும் செய்து விட்டான்.

பெரியவரும் ''இந்த ஊரில் தன பாலன் போன்ற நல்லவர்கள் இருக்கிருர்கள். அவர் போன்றவர் களின் உதவியால் இம்மாதிரி பிர சங்கங்கள் நடைபெறுகின்றன'' என தனபாலனை மிகவும் புகழ்ந்து விட்டுத் தம் உபன்னியாசத்தை நடத்தினுர். உபன்னியாசத்தைக் கேட்ட தனபாலனும் ஒரேயடியாக மகிழ்ந்து போனுன். ஊரார் எல் லோரும் அவன் பெருமையை பெரியவர் சொல்லத் தெரிந்து கொண்டார்களே! மறுநாளே பெரியவர் தனபாலனை அணுகி பிரசங்கத்திற்காக நன்கொடை கொடுக்க வேண்டிக் கொண்டார்.

தனபாலனும் ஒரு காகிதத்தில் தன் பெயரை எழுதி நன்கொடை நூற்றியொரு ரூபாய் எனப் போட்டு விட்டு அந்தக் காகி தத்தை பெரியவரிடம் கொடுத்து ''ஊரில் மற்றவர்களிடமும் நன் கொடை வசூலித்து வாருங்கள். பிறகு என் பணத்தையும் கொடுக் கிறேன்'' என்ருன்.

பெரியவர் ஊரில் மற்றவர்களை அணுக அவர்களும் தம் சக்திக் கான தொகையை எழுதி பணமும் கொடுத்தார்கள். முடிவில் பெரிய வர் தனபாலனிடம் வரவே அவ னும் ''நாளை காலை என் கணக்குப் பிள்ளை வருவார். சொல்கிறேன். வாங்கிப் போங்கள்'' என்ருன்.

மறுநாள் பெரியவர் கணக்குப் பிள்ளையை பார்த்த போது அவர் ''இன்னும் எஜமானர் சொல்ல வில்லையே'' என்று கூறி விட்டுத் தன் வேலைக்குப் போய் விட்டார்.

பெரியவர் மறுபடியும் தனபாலனிடம் போய் நிற்கவே தனபாலனும் ''அடடா! நீங்களா! கணக்குப் பிள்ளையிடம் சொன்னேனே. கொடுக்கவில்லையா? மறுபடியும் சொல்கிறேன். நாளை வந்து பணத்தை வாங்கிக் கொள்ளுங்கள்'' என்றான்.

மறுநாள் போன போதும் கணக்குப்பிள்ளை ''என்னிடம் எஜமான் எதுவும் சொல்லவில்லை. இதற்குள் உங்களுக்கு எங்கள் எஜமானர் குணம் தெரிந்து போயிருக்க வேண்டுமே. அவர் நன்கொடைக்கான தொகையை வாக்களிப்பவர் ஆனால் கொடுக்க மாட்டார்'' என்றான்.

பெரியவரும் நேரே தனபாலனைக் காணப் போனார். அப்போது ஊர்ப் பிரமுகர்கள் பலர் இருந்தார்கள். அவர்களெல்லாம் பெரியவருக்கு நன்கொடை கொடுத்தவர்களே. எல்லோர் முன்னிலும் பெரியவர் ''ஐயா பெரிய மனிதரான தனபாலரே. நீங்களோ உங்கள் கணக்குப் பிள்ளையிடம் சொன்னதாக ஒரு பொய்தான் சொன்னீர்கள். ஆனால் நானோ பொதுக்கூட்டத்தில் உங்களுக்கு இல்லாத பெருமைகளை எல்லாம் சொல்லி எவ்வளவு பொய் சொல்லிவிட்டேன். அதன் பலனை அனுபவிக்கத்தானே வேண்டும். நான் போய் வருகிறேன்'' என்று கூவினார்.

எல்லோருக்கும் விஷயம் புரிந்து விட்டது. தனபாலனும் அவமானத்தால் தலை குனிந்து கொண்டான். உடனேயே தன் கணக்குப் பிள்ளையைக் கூப்பிட்டு ''எனது நன்கொடை ரூபாய் நூற்றி ஒன்றை உடனே இவருக்குக் கொடுங்கள்'' என்றான். பெரியவரும் பணத்தை வாங்கிக் கொண்டு போனார். ஊராரும் ''சரியான ஆசாமி! தனபாலனிடம் பணத்தைக் கறந்து விட்டாரே'' என ஆச்சரியப்பட்டனர்.





# நல்லவன் ஆகப் பார்!

**கோ**விந்தசாமியின் மகன் ராமசாமி. இருபது வயதாகியும் ராமசாமி எதுவும் படிக்காமல் உதவாக்கறைப் பயல்களோடு சேர்ந்து கெட்ட பழக்கங்களை எல்லாம் கொண்டு விட்டான். அவனை எப்படித் திருத்துவது என்று கோவிந்தசாமி கவலைப் படலானான்.

அந்த சமயத்தில் அவனுக்குத் தெரிந்த அறிஞர் அப்பாசாமி அவ்வூருக்கு வந்தார். அவரிடம் கோவிந்தசாமி தன் மகனைப் பற்றி கூறினான். அவரும் அவனைத் தாம் நல்லவழிக்குக் கொண்டு வருவதாகக் கூறி மறு நாள் கோவிந்தசாமியின் வீட்டிற்கு வந்தார்.

கோவிந்தசாமி ராமசாமியைக் கூப்பிடவே அவனும் அப்பாசாமியின் முன் வந்து நின்றான். அப்பாசாமியும் அவனைப் பார்த்து விட்டு ''பையன் அப்படி ஒன்றும் கெட்டவனாகத் தெரியவில்லையே. இவன் இப்போது இப்படி கெட்ட செயல்களைச் செய்ததால் என்ன குடி முழுகிப் போய் விட்டது? கெட்ட செயலைப் புரிவதே கடினம். கடினமான வேலை செய்பவனே உயர்வான்'' என்றார்.

கோவிந்தசாமியோ இவர் என்ன இப்படிச் சொல்கிறார் எனத் திகைத்தான். ராமசாமியோ அறிஞரும் தனக்கே சாதகமாகப் பேசுகிறார் என எண்ணி மகிழ்ந்தான்.

அப்போது அப்பாசாமி ''நாம் மூவரும் இப்போது இவ்வூரில் நல்லவர்களாக பெயர் பெற்றுள்ள சிலரைப் பார்க்கலாம்'' எனவே கோவிந்தசாமியும் ராமசாமியும் அவருடன் கிளம்பினார்கள். முதலில் பண்ணைக்காரர் பரமசிவத்

சீதா நாராயணன்

தின் வீட்டிற்குப் போனார்கள். அவரும் ''நான் எவ்வளவு நல்லது செய்தாலும் என் வேலைக்காரர்கள் என்னை ஒரு ராட்சஸன் என நினைக்கிறார்கள். ஒரு முறை ஏதோ ஒரு காரணத்திற்காக என் முரட்டு மாட்டை அடித்துக் கொன்றேன். அது முதல் நான் எவ்வளவு நல்லவனாக நடந்து கொண்டாலும் அவர்கள் என்னை நல்லவன் என்றே கூறுவதில்லை. மகா முரடன் என்றே சொல்கிறார்கள். என்னைப் பார்த்தாலே ஏதோ ஒரு ராட்சஸனைக் காண்பது போல பயந்து நடுங்குகிறார்கள். நான் செய்த ஒரே செயலுக்கு இப்படி ஒரு பெயர் எனக்குக் கிடைத்திருக்கிறது'' என்று கூறினார்.

அப்போது அப்பாசாமி ''ஆமாம். எவ்வளவு நல்லது செய்தாலும் இப்படி ஒரு கெட்ட செயல் செய்தாலே கெட்ட பெயர் வந்து விடும்'' என்றார். அதற்குப் பிறகு அவர்கள் அதே ஊரில் வேறு மூவரைப் பார்த்தார்கள். அவர்களும் தாம் நல்லவர்களே என்றும் தாம் ஏதோ ஒரு முறை செய்த ஒரு கெட்ட செயலால் தம் பெயர் கெட்டுப் போனது எனவும் கூறினார்கள்.

இதைக் கேட்டு கோவிந்தசாமி ''பார்த்தாயா நல்லவன் எனப்



பெயர் பெற எவ்வளவு கஷ்டப் பட வேண்டும்'' என்று ராமசாமியிடம் சொன்னார்.

அப்பாசாமியும் ''இரு இரு. இந்த ஊரிலேயே படு போக்கிரி யார்?'' என்று கேட்டார். கோவிந்தசாமியும் ''ஏன்! என் மகன்தான்'' என்றான். அப்பாசாமியும் ''இவனை விட்டுத் தள்ளு. இன்னும் யாராவது இருக்கிறார்களா?'' என்று கேட்டான்.

கோவிந்தசாமியும் ''இருக்கிறான். பக்கிரி என்பவன்தான் அவன்'' எனவே அப்பாசாமியும் ''அவனைப் பார்த்துப் பேசலாம்'' என்றார். மூவரும் பக்கிரியைக் காணப் போனார்கள்.

அப்பாசாமி அவனிடம் "பக்கிரி. உன்னை ஊரெல்லாம் தூற்று கிறதே. நீ கவலைப் படவில்லையா?'' எனக் கேட்க அவனும் ''யாரோ என்னவோ சொல்லட்டும். எனக்கு என்ன? அவர்கள் என்ன சொன்னாலும் நான் கவலைப் படமாட்டேன்'' என்றான். அது கேட்டு மூவரும் வீடு திரும்பினர்.

வழியில் ஒரு பிச்சைக்காரன் பிச்சை கேட்கவே அப்பாசாமியும் ''குதிர் மாதிரி கொழுத்து இருக்கிறாயே. ஏதாவது வேலை செய்து பிழைக்கக் கூடாது? பிச்சை எடுக்க வந்து விட்டாயே'' என்றார்.

அதற்குப் பிச்சைக்காரன் ''இதோ பாரய்யா! இஷ்டமிருந்தால் பிச்சை போடு. இல்லா விட்டால் பேசாமல் இரு. நான் என்ன திருடியும் கொலை செய்தும் சூதாடியுமா பிழைக்கிறேன்! பிச்சை தானே எடுக்கிறேன்'' என்றான்.

இதெல்லாம் கேட்ட ராமசாமிக்கு எல்லோர் சொன்னதும் மனதில் உறைத்தது. அப்பாசாமியும் "பார்த்தீர்களா? ஒரு பிச்சைக்காரன் கூடதான் கெட்டவன் என அழைக்கப்பட விரும்புவதில்லை. எல்லோரும் நல்லவன் என்று பெயர் எடுக்கவே பாடு படுகிறார்கள். கெட்டவனோ யார் எப்படி வேண்டாலும் போகட்டும் என நினைத்து ஊராரால் வெறுக்கப் படுகிறான். எனவே கெட்ட பெயர் எடுப்பது சுலபம். நல்ல பெயர் எடுக்க உழைக்க வேண்டும். உழைப்பவனே உயர்வான்'' என்றார்.

ராமசாமியும் ''இப்போதுதான் எனக்கும் உண்மை தெரிந்தது. இனி நான் திருந்தி விட்டேன்'' என்றான். அப்பாசாமி கோவிந்தசாமியைப் பார்த்து புன்னகை புரிந்தார். கோவிந்தசாமியும் அவரை வணங்கினான். ராமசாமி நாளடைவில் திருந்தி விட்டான்.






சுகர் ஜனக மகாராஜர் கூறியதைக் கேட்டு ''நீங்கள் இவ்வளவு கூறியும் என் சந்தேகம் தீர்ந்தபாடில்லை. கல்யாணம் செய்து கொண்டபின் குடும்ப வாழ்க்கையில் ஈடுபட்டு மூழ்கி விடுகிறான். சுகமாக வாழ்ந்தால் மகிழ்ந்தும், கஷ்டப்பட்டால் மனம் ஒடிந்தும் போகிறான், இப்படிப்பட்டவன் எப்படி மோட்சத்தை அடைய முடியும்?'' என்று கேட்டார்.

''விருப்பு வெறுப்பு இல்லாமல் செய்யப்படும் எந்த வேலையும் நல்லதாகவே முடியும்" என்றார் ஜனகர். அதற்கு சுகர் ''மாயையில் சுகப்பட்டவன் எப்படி விருப்பு வெறுப்பில்லாமல் இருக்க முடியும்? விளக்கு என்று சொன்னால் வெளிச்சம் ஏற்பட்டு விடுமா? சாஸ்திரங்களைப் படித்து விட்டால் அஞ்ஞானம் போய் விடுமா? நடைமுறையில் அவற்றை அனுசரிக்க வேண்டாமா? உங்களிடம் பணம், புத்திரன், மனைவி, நாடு என்ற ஆசைகள் உள்ளன. நீங்கள் எப்படி முக்தி அடைவீர்களாம்? அரசனாக இருப்பதால் நியாயமாக தண்டனை அளிக்க வேண்டும். நல்லவர்களை பாதுகாக்க வேண்டும். ஒரு மனிதனைக் காத்து இன்னொருவனைத் தண்டிக்கும் நீங்கள் விருப்பு வெறுப்பற்றவர் என்று எப்படி ஆகமுடியும். எனக்கோ வீடு, வாசல், மகன், மனைவி என்றெல்லாம் கிடையாது. சுக துக்கங்களை சமமாக

பீஷ்மரின் செயல்



கருதுபவன். என் போன்ற விருப்பு வெறுப்பற்றவர்களுக்குத்தான் முக்தி மோட்சம் எல்லாம் கிடைக்கும்'' என்ருர்.

ஜனகரும் ''சன்னியாசியாகிக் காட்டுக்குப் போய் விட்டால் மட்டும் எல்லாம் மறந்துவிட முடியுமா? அவன் மனம் ஒரே நிலையில் இருக்க வேண்டும். அது வேண்டும் இது வேண்டும் என்று ஆசைப் படக் கூடாது. தனக்கு என்று எதையும் வைத்துக் கொள்ளாமலும் தான் என்று எண்ணுமலும் இருக்க வேண்டும். தான் என்ற எண்ணம் விட்டு ஒருவன் எந்த வழியில் சென்ருலும் மோட்சத்தை அடையலாம். தான் என்ற எண்ணம் போகாவிட்டால் சன்னியாசியாளுலும் மோட்சம் கிடைக்காது'' என்ருர்.

அது கேட்டு சுகர் திருப்தி அடைந்து தன் தந்தையின் இருப்பிடத்திற்கு வந்தார். அவர் வியாசரிடம் ''அப்பா, நான் ஜனகரைப் போல வாழப் போகிறேன்'' என்ருர். அது கேட்டு வியாசர் மகிழ்ந்து சுகருக்கு பிவரி என்ற பெண்ணைக் கலியாணம் செய்து வைத்தார்.

சுகரும் தாம் எண்ணிபடியே விருப்பு வெறுப்பு இல்லாமல் வாழ்க்கையை நடத்திஞர். அவருக்கு கௌரப்பிரபன், தேவசுருதன், பூரி, கிருஷ்ணன் என்ற நான்கு புதல்வர்களும், கீர்த்தி என்ற மகளும் பிறந்தார்கள். கீர்த்தி விப்ராஜக் என்பவரின் மகஞகிய அணுகரை மணந்து கொண்டு பிரம்மதத்தன் என்ற மகனைப் பெற்றெடுத்தாள்.

பிரம்மதத்தன் அரசஞகி ஆட்சி புரியும் போது ஒருமுறை நாரதர் அவன் தர்பாருக்கு வந்து அவருக்கு மாயமந்திர உபதேசம் செய்தார். அதஞல் பிரம்மதத்தனுக்கு ஞானேதயம் ஏற்பட அவன் ஆட்சியைத் தன் மகனிடம் ஒப்படைத்து விட்டு சன்னியாசியாகி பத்திரிகாசிரமத்திற்குச் சென்ருன்.

பின்னர் அவர் கைலாச சிக ரத்தை அடைந்து தவம் செய்து முக்தி அடைந்தார். தன் மகன் போனது பற்றி வியாசர் மிகவும் மனம் வருந்தி 'ஆ மகனே' எனக் கைலாசத்திற்குச் சென்றார். சுகர் எதிரொலியாகி வியாசர் கேட்ட தற்கு பதில் அளித்தார்.

அப்போது சிவன் வியாசர் முன் தோன்றி ''உன் மகன் பலரும் அடைய ஆசைப்படும் மாபெரும் முத்தி பெற்றான். அவனை எண்ணி வருத்தப்படலாமா!'' என்றார். வியாசரும் ''என் மகனைக் காணு மல் என்னால் இருக்க முடியவில் லையே'' என்றார். சிவனும்'' அப்ப டியானால் உன் மகன் உன் நிழல் வடிவில் உன்னோடு எப்போதும் இருப்பான்.'' எனக்கூறி மறைந் தார். வியாசரும் தன் ஆசிரமத் திற்கு வந்து சேர்ந்தார்.

சௌனகர் முதலிய முனிவர்கள் சுகரின் கதையைக் கேட்டபின் சுத ரிடம் ''பிறகு வியாசர் என்ன செய்தார்?'' என்று கேட்கவே சுதர் தொடர்ந்து கூறலானார்.

வியாசரின் சீடர்களான தேவ லர், வைசம்பாயனர், ஜைமினி, அசிதர், சுமந்தர் முதலானோர் தம் தம் குருவின் அனுமதி பெற்று ஆசிரமத்திலிருந்து போய்விட் டார்கள். அவரது மகனான சுகரும் போய்விடவே வியாசரும் அங்



கிருந்து வேறு எங்காவது போய் விட எண்ணினார். அப்போது அவருக்குத் தாயாரான சத்திய வதியின் நினைவு வந்தது. அவளைப் பற்றி அவர் விசாரிக்க அவள் சந் தனு மன்னனை மணந்து கொண்டு வாழ்வதாகத் தெரிந்து கொண் டார்.

வியாசரும் அவர்கள் இருக்கும் இடத்தருகே போய் சரஸ்வதி நதிக்கரையில் ஆசிரமம் அமைத் துக் கொண்டு இருந்து வரலானார். சந்தனுவுக்கும் சத்தியவதிக்கும் சித்திராங்கன், விசித்திரவீரியன் என்ற இரு புதல்வர்கள் பிறந் தனர். கொஞ்ச காலத்திற்திற்குப் பின் சந்தனு இறக்க அவரது



மூத்த மகனை பீஷ்மர் தன் தந்தைக்கான ஈமச் சடங்குகளைச் செய்தார். பிறகு அவர் சித்திராங்கதனை மன்னனாக்கினார்.

சித்திராங்கதன் ஒருமுறை வேட்டையாடப் போய் ஒரு கந்தர்வனுடன் போரிட்டு இறந்தான். பீஷ்மர் தன் தம்பிக்கு ஈமச்சடங்குகளைச் செய்து விசித்திர வீரியனை சிம்மாசனத்தில் அமர்த்தினார். விசித்திர வீரியன் வாலிபன். கல்யாணமாகாதவன். அவனுக்கு விவாகம் செய்ய பீஷ்மர் எண்ணினார்.

அப்போது காசி மன்னன் தன் மூன்று புதல்விகளான அம்பை, அம்பிகை, அம்பபாலிகைக்கு சுயம்வரம் நடத்தினான். பல அரசகுமாரர்கள் வந்திருந்தார்கள். பீஷ்மரும் அங்கே சென்றார். அரசகுமாரர்கள் முன்னிலையிலேயே பீஷ்மர் அம்பையையும் அம்பிகையையும் அம்பபாலிகையையும் பிடித்துத் தன் தேரில் ஏற்றி உட்கார வைத்துக் கொண்டார். பின்னர் பீஷ்மர் மூவரையும் கவர்ந்து வந்து தன் தாய் முன் நிறுத்தினார். பின்னர் விசித்திர வீரியனின் விவாக முகூர்த்தத்தை நிச்சயித்தார்.

அப்போது அம்பை பீஷ்மரிடம் ''நான் சால்வ மன்னனை மணக்கத் தீர்மானித்து விட்டேன். அவரும் சம்மதித்திருக்கிறார். ஆனால் இப்போது என்னைக் கவர்ந்து வந்து விட்டீர்களே'' என்றாள்.

பீஷ்மரும் ''சரி உன்னை விட்டு விடுகிறேன். நீ சால்வ மன்னனிடம் சென்று விடு'' எனக் கூறி அனுப்பினார். அம்பையும் சால்வ மன்னனை அணுகித் தன்னை மணந்து கொள்ளுமாறு சொன்னாள். அவனோ ''பீஷ்மர் உன்னைத் தன் கையால் தூக்கி தேரில் வைத்துக் கொண்டு சென்றார். எனவே அவர் தொட்ட உன்னை நான் மணந்துகொள்ள முடியாது'' எனக்கூறி அவளை பீஷ்மரிடம் அனுப்பினான். அம்பையும் பீஷ்மரிடம் வந்து சால்வன் சொன்ன

தைக் கூறி ''இனி நீங்கள்தாம் என்னை மணந்து கொள்ள வேண்டும்'' என்றாள். பீஷ்மரோ ''நான் பிரம்மச்சாரியாக இருப்பதாக சபதம் செய்திருக்கிறேன். உன்னை மணந்து கொள்ள முடியாது. உன் தந்தையிடம் போ'' என்று கூறி அனுப்பினார். அவளோ காசி மன்னனிடம் போகாமல் காட்டிற்குப் போய் தவம் செய்யலானாள். பீஷ்மர் அம்பிகையையும், அம்பபாலிகையையும் விசித்திர வீரியனுக்கு மண முடித்து வைத்தார்.

விசித்திர வீரியனும் சில வருஷங்களுக்குப் பின் இறக்கவே சத்தியவதி தன் வம்சம் நசித்து விடுமோ என பயந்து பீஷ்மரிடம் ''நீ அம்பிகை, அம்பாலிகைகளின் வாயிலாக எனக்குப் புத்திர சந்ததி ஏற்படச் செய்'' என்றாள்.

பீஷ்மர் "நான் யாரையும் மணந்துகொள்ள மாட்டேன் என்றும் நாட்டையும் ஆளமாட்டேன் என்றும் உங்கள் முன் தானே சபதம் செய்தேன். எனவே உத்தமமான பிராம்மணரிடம் நீங்கள் வேண்டிக் கொள்ளுங்கள்'' என்றார்.

அப்போது சத்தியவதி வியாசரை நினைவு படுத்திக் கொண்டு அவரை வரவழைத்தாள். அவர் வந்ததும் அவள் ''உன் தம்பியின் மனைவிகளின் வாயிலாக என் வம்சம் தழைக்க வழி செய்''



என்று வேண்டிக் கொண்டாள். தன் தாய் கூறியபடி வியாசர் அம்பிகையின் வாயிலாக திருதராஷ்டிரனையும் அம்பபாலிகையின் வாயிலாக பாண்டுவையும் மகன்களாக அடைந்தார். திருதராஷ்டிரன் பிறவிக்குருடன். பாண்டுவும் பாண்டு ரோகத்தால் பீடிக்கப் பட்டவன். இது கண்டு சத்தியவதி அம்பிகையிடம் மீண்டும் ஒரு மகனைப் பெற்றுக் கொடுக்கும்படி கூறினாள்.

அம்பிகையோ தன் தோழி ஒருத்தியை வியாசரிடம் அனுப்பி ஒரு மகனைப் பெறச் செய்தாள். அந்த மகனே விதுரன். வியாசருக்குச் சமமாக விளங்கினான்.



இதைக்கேட்ட முனிவர்கள் சுதரிடம் ''ஆமாம். சத்தியவதி எப்படி சந்தனுவை மணந்து கொண்டாள்? அதற்குமுன் வியாசர் எப்படிப் பிறந்தார்?'' என்று கேட்டார்கள்.

சுதரும் ''உபரிசரவசு என்பவன் சேதி நாட்டை ஆண்டு வந்தான். அவன் பராக்கிரமசாலி. அவன் இந்திரனைக் குறித்து தவம் செய்து அவரது விமானத்தை வாங்கிக் கொண்டான். அவன் எபபோதும் அதில் அமர்ந்து ஆகாயத்தில் திரிந்து கொண்டிருந்தான்.

உபரிசரவசுவின் மனைவி கிரிகை மிகவும் அழகானவள். அவளுக்கு ஐந்து மகன்கள் பிறந்தனர். அவர்கள் ஐந்து நாடுகளின் மன்னர்களாயினர்.

ஒருமுறை கிரிகை தன் கணவன் வருகைக்காக எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். அப்போது வசுவை அவனது தந்தை அழைத்து ''மகனே, உன் தாத்தாவிற்கு திவசம் செய்ய வேண்டும். நீ போய் ஏதாவது ஒரு மிருகத்தை வேட்டையாடிக் கொண்டு வா'' என்று சொல்லி அனுப்பினர்.

வசுவும் தன் தந்தையின் சொற்படி வேட்டையாட காட்டிற்குப் போனன். ஆனல் அவன் மனைவியைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தான். அப்போது ஒரு பிராமணரின் சாபத்தால் யமுனையில் மீனக இருந்து வந்த அத்திரிகை என்ற அப்சரப் பெண் கர்ப்பமுற்ருள்.

முனிவர்கள் சுதர் சொல்வதைக் கேட்டு ஒன்றும் விளங்காதவர்களாய் ''அத்திரிகைக்கு சாபமா? ஏன்?'' என்று கேட்க சுதர் தொடர்ந்து சொல்லலானர்.

ஒருமுறை ஒரு பிராம்மணர் யமுனை நதியில் நீராடி விட்டு சந்தியா வந்தனம் செய்து கொண்டிருந்தார். அப்போது அத்திரிகை என்ற அப்சரப்பெண் யமுனைக்கு வந்து குளிக்க மீனக மாறிக் குதித்தாள். அப்போது அவள் விளையாட்டிற்காக யமுனையில் நின்ற பிராம்

மணரின் கால்களைப் பற்றி இழுத்தாள்.

திடீரெனத் தன் கால்களைப் பற்றி யாரோ இழுப்பது கண்டு பிராம்மணருக்குக் கோபம் வந்தது. அவர் நீரினுள் பார்த்தார். அந்த மீன் யாரென்பது அவருக்குத் தெரிந்து போய் விட்டது.

உடனே பிராம்மணர் அவளை என்றென்றுமே மீனாக இருக்கும்படி சபித்து விட்டார். அப்போது அவள் அவரது கால்களில் விழுந்து வணங்கி சாபவிமோசனம் கேட்கவே அவரும் ''கொஞ்ச நாட்களுக்குப் பிறகு உனக்கு ஒரு மகனும், மகளும் பிறப்பார்கள். அதன் பிறகு நீ உன் பழைய உருவம் பெறுவாய்'' எனக் கூறி விட்டுப் போனார். அதுமுதல் அவள் யமுனை நதியிலே இருந்தாள்.

வசுவின் காரணமாக அந்த மீன் கர்ப்பமுற்றது. சில நாட்களுக்குப் பிறகு அது ஒரு மீனவனின் வலையில் அகப்பட்டது. அவள். அதனை எடுத்து அறுக்கவே அதன் வயிற்றிலிருந்து ஒரு ஆண் குழந்தையும், ஒரு பெண் குழந்தையும் வெளி வந்தன. அவன் குழந்தைகளைக் கொண்டுபோய் அரசனான வசுவிடம் காட்டினான்.

வசுவும் அவற்றைப் பார்த்து ஆச்சரியப் பட்டு விட்டு ஆண் குழந்தையை தான் எடுத்துக் கொண்டான். பெண் குழந்தையை அந்த மீனவனிடமே கொடுத்து விட்டான், அவளுக்கு மீனவன் மச்சகந்தி, மச்சோதரி, காளிகை என்று மூன்று பெயர்களை வைத்தான்.

வசு தான் கொண்டு போன ஆண் குழத்தைக்கு மத்சன் என்று பெயர் வைத்து வளர்க்கலானான். மீன் உருவில் இருந்த அத்திரிகை சாப விமோசனம் பெற்று அப்சரஸ்திரீயாகி தன் உலகிற்குச் சென்றாள். அவளது இரு குழந்தைகளும் மன்னனிடமும் மீனவனிடமும் வளர்ந்தன.



# இதைத்தானே சொன்னேன்

உதயபுரத்தில் ஒரு பணக்கார வியாபாரியின் மகன் தன் தந்தை இறந்தபின் பணத்தைக் கண்டபடி செலவு செய்து ஓட்டாண்டி ஆனுன். அவனது நண்பர்கள் அப்போது அவனை விட்டுப் போய்விடவே அவன் தன் மனைவியுடன் வேறு ஊருக்குக் கிளம்பினுன். அதுகண்டு அவனது நண்பர்கள் சிரித்தார்கள்.

அப்போது அவன் அவர்களிடம் ''நான் மறுபடியும் பணக்காரனுகி வருவேன். அப்போது நீங்கள் எல்லாம் என்னைச் சுற்றிச்சுற்றி வருவீர்கள். இப்படி நடக்காவிட்டால் நான் செத்துப் போனவன் போலத்தான்'' என்ருன்.

அவன் வேருெரு ஊரில் போய் விவசாயம் செய்து ஏராளமாகப் பணம் சம்பாதித்தான். அந்தப் பணத்தோடு அவன் தன் மனைவியுடன் உதயபுரிக்குத் திரும்பி வரலானுன்.

வழியில் ஒரு ஊரில் அவன் ஒரு சத்திரத்தில் தங்கினுன். அப்போது சிலர் அங்கே சூதாடுவது கண்டு அவனும் அந்த சூதாட்டத்தில் கலந்து கொண்டு சம்பாதித்ததெல்லாம் தோற்று விட்டான்.

அப்போது அவன் மனைவி ''நீங்கள் உங்கள் நண்பர்களிடம் கூறியது என்ன ஆயிற்று?'' என்று கேட்டாள். அவனும் ''நான் சொன்னபடி நடக்காவிட்டால் நான் இறந்தவனுக்குச் சமம்தானே! பழைய கெட்ட வழக்கங்கள் கொண்ட மனிதனுக நான் இல்லை. அந்தப் பழைய மனிதன் இறந்துவிட்டானே. இப்போது நான் புது மனிதன்'' என்ருன்.







# சண்டை போடாதே!

கண்ணம்மா ஒன்றும் தெரியாத அப்பாவி. அவளை ஒரு சாதாரண தொழிலாளி செல்லப்பன் மணந்து கொண்டான். செல்லப்பனுக்கு எப்போதும் மூக்குக்குமேல் கோபம் வந்துவிடும்.

குடித்தனம் செய்ய ஆரம்பித்த போதே தன் கணவனின் கோபத்திற்கு கண்ணம்மா பயந்து வந்தாள். எனவே அவள் கணவன் சொல்வதை கவனமாகக் கேட்டு அதன்படி நடக்கலானாள். ஆனாலும் பதற்றத்தில் சில சமயம் நேர்மாறாகவும் செய்வது உண்டு.

ஒருநாள் செல்லப்பன் வெங்காயத்தையும் வெங்காயத்தாள்களையும் கொண்டுவந்தான். அவற்றை கண்ணம்மாவிடம் கொடுத்து ''வெங்காயத்தை வதக்கி வை. வெங்காயத்தாளைப் போட்டு குழம்பு வை'' எனக் கூறி விட்டுப் போனான். கண்ணம்மா அவன் சொன்னதைச் சரியாகக் கேளாததால் வெங்காயம் போட்டு குழம்பை வைத்து வெங்காயத் தாள்களைப் பொடிப்பொடியாக நறுக்கி கீரை போல வதக்கி வைத்தாள்.

செல்லப்பன் வீடு வந்து உட்கார்ந்தான். தன் மனைவி சமைத்திருப்பதைக் கண்டு ''நீ எப்போதும் நான் சொல்கிறபடி செய்கிறதே இல்லை'' என்று கோபித்துக் கொண்டு அவளை அடித்தும் விட்டான். கண்ணம்மா வலி தாங்க முடியாமல் ஓவெனக் கத்தி விட்டாள்.

அப்போது அந்த வீட்டினுள் இருந்த பரண் மீதிருந்து ஒருவன் 'தொப்' பென்று குதித்தான். அவன் ஒரு திருடன். அவன் முன்பே யாருக்கும் தெரியாமல்

எஸ். வெங்கடராமன்

வீட்டினுள் புகுந்து அங்கு ஒளிந்து கொண்டிருந்தான். அவனது பயங்கர தோற்றத்தையும் கையில் கத்தியையும் கண்டு செல்லப்பன் பயந்து போனுன்.

திருடனே கத்தியைக் காட்டி மிரட்டி ''உம். வீட்டிலுள்ள பணத்தை எல்லாம் எடுத்துக் கொடு'' என்று செல்லப்பனிடம் கூறினுன். செல்லப்பனும் பயந்து போய் திருடன் கேட்டபடி பணம் நகை எல்லாவற்றையும் மூட்டை யாகக் கட்டிக் கொடுத்தான். திருடன் அதனை வாங்கிக்கொண்டு ''உம் வெங்காய வாசனை 'கம்' மென்று வீசுகிறதே. வெங்காயக் குழம்பா உன் மனைவி வைத்திருக் கிருள்? உம், எனக்குச் சாதம் போட்டு குழம்பு விடும்படி உன் மனைவியிடம் சொல்'' என்ருன்.

செல்லப்பனும் 'திரு திரு'வென விழித்துக் கொண்டிருக்கும் தன் மனைவியைப் பார்த்து ''இவர் சொன்னதைக் கேட்டாயா, போ. உடனே சாதம் பரிமாறு" என்ருன். அவளும் அந்தத் திருடனுக்கு சாதம் போட்டு குழம்பையும் ஊற்றினுள்.

நாக்கை சப்பு கொட்டிக் கொண்டு திருடனும் ''பேஷ். வெங்காயக் குழம்பு நன்ருக ருசி யாக இருக்கிறதே. இப்படி குழம்பு வைத்த உன் மனைவியைப் போய் அடித்தாயே! உன் வீட்டில் திருடிய எனக்கோ சாப்பாடு போட்டு அனுப்புகிருய்? என்ன



மூளே உனக்கு! என்றுகூறி சிரித்தான்.

செல்லப்பன் பதில் எதுவும் சொல்ல முடியாமல் தலைகுனிந்து நின்ருன். அப்போது திருடனும் "நான் எப்படி திருடனுக ஆனேன் தெரியுமா? என் தந்தை ஒரு குடிகாரன். எப்போதும் குடித்துவிட்டு என் தாயை அடிப்பார். என் தாயோ கூலி வேலை செய்து பணம் சம்பாதித்து குடும்பம் நடத்தி வந்தாள். என்னைப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பிப் படிக்க வைக்கவும் முயன்ருள். ஆனல் என் தந்தையோ என் தாய் சம்பாதித்த பணத்தையும் பிடுங்கிக் கொண்டு குடிக்கலானுர். என் தாயாரை அவர் ஒருநாள் 'அடிஅடி' என்று அடித்துவிட்டார். அதனல் அவள் இறந்தே விட்டாள். நானே பயந்து போய் வீட்டை விட்டே ஓடிப்போனேன். படிப்பும் இல்லை. வேறு தொழில் எதுவும் செய்யத் தெரியாததால் திருடத்தொடங்கினேன். கணவனும் மனைவியும் ஒற்றுமையுடன் வாழ்ந்தாலே குடும்பம் சுகமாக இருக்கும். இல்லாவிட்டால் அவர்களும் அவர்கள் குழந்தையும் திண்டாட வேண்டியதுதான். நீ சொன்னது போல் உன் மனைவி செய்யாமல் கொஞ்சம் மாற்றி விட்டாள் என்று கோபப்பட்டாயே. வெங்காயத்தை வதக்கினுலும் அதே வாசனைத்தான் வரும். குழம்பில் வெங்காயத்தைப் போட்டாலும் அதே வாசனைத் தான் வரும். ஆக வாய்க்கு ருசியாக இருக்கிறதே என்று சந்தோஷப்படு. இனிமேலாவது இப்படியெல்லாம் சண்டை போடாதே'' என்ருன். பிறகு அவன் தான் வாங்கிக் கொண்ட பண மூட்டையை கண்ணம்மாவிடம் கொடுத்து விட்டு வீட்டை விட்டுப் போய் விட்டான். அன்று முதல் செல்லப்பன் கண்ணம்மாவை கோபித்துக் கொள்ளாமல் அவளிடம் அன்பு காட்டி வரலானுன்.



# எப்படித் தெரிந்தது ?

ஒருநாள் கிருஷ்ண தேவராயரிடம் அவரது மந்திரியான திம்மரசு தாம் தற்போதுள்ள ஆயுதக்கிடங்குகளை இடம் மாற்றப்போவதாகக் கூறினர். அதற்கு என்ன காரணம் என்று ராயர் கேட்டார்.

திம்மரசுவும் ''நம் படையில் மிக முக்கியமான ஒரு அதிகாரி இறந்து விட்டான். அவரது இரு மகன்களும் பணத்தை வாரி வாரி இறைக்கிறார்கள். இறந்த அதிகாரி தன் சம்பளத்தில் இவ்வளவு பணம் சேர்த்திருக்க முடியாது. நம் ஆயுதங்களின் ரகசியத்தை எதிரி பாமினி சுல்தானிடம் கூறிக் கைக்கூலி பெற்றிருக்கிறான் என்று தெரிகிறது'' என்றார்.

ராயரும் இதற்கு என்ன ஆதாரம் என்று கேட்டார். திம்மரசும் ''இந்த ரகசியத்தை பாமினி சுல்தானுக்குக் கொடுப்பதாகவும் ஆள் ஒருவன் மூலம் ஆசைக்காட்டிப் பார்த்தேன். சுல்தான் அதுபற்றி அக்கறை காட்டவில்லை, ஏனெனில் ஏற்கனவே அவருக்கு இறந்துபோன இந்த தேசத்துரோகி முழு விவரம் கொடுத்துப் பணம் பெற்று விட்டான்'' என்றார்.

ராயரும் உடனே ஆயுதக் கிடங்குகளை வேறு இடங்களுக்கு மாற்ற அனுமதி அளித்தார்.



# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ. 25

இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1979 மே மாத இதழில் வெளியிடப்படும்







S. G. Seshagiri

Mohan D. Desai

- ★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும்.
- ★ மார்ச் 10 தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.
- ★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ. 25 பரிசு. இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே.
- ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி அம்புலிமாமா 'போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-26 என்ற முகவரிக்கு அனுப்பவும்.

---

## ஜனவரி மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : முதுமை மனமும் முற்றிய பயிரும்.

இரண்டாவது போட்டோ : இளமை மனமும் இளம் பயிரும்.

பரிசு பெற்றவர் : மிஸ். ரஜனி

6—B. மனோகர்புக்கர் ரோடு, கல்கத்தா-26.

பரிசுத் தொகை ரூ. 25 ம் இம்மாதக் கடைசிக்குள் அனுப்பிவைக்கப்படும்.

